ஸ்ரீராமாநுஜன்–378

ஆசிரியர் : ஸ்ரீ காஞ்சீ மஹாவித்வான் P. B. அண்ணங்கராசாரியர்

தொகுதி 32 | சித்தார்த்தி ௵ தைமீ 1980 ௵ | பகுதி 11

# ஸ்ரீவைஷ்ணவவுலகின் தௌர்ப்பாக்யம்.

ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி வானமாமலை பெரியஸ்வாமி ஸ்ரீராமாநுஜ ஜீயர்ஸ்வாமி நிகழும் ஸித்தார்த்தி௵ தைமீ 3உ (17—1—80) வியாழன் காலை பதினொரு மணியளவில் திருநாடலங்கரித்தருளியாயிற்று. அடியேன் மார்கழி முப்பதும் சென்னைமாநகரில் விடைகொண்டிருந்தபோது வானமாமலையிலுள்ள அன்பர்கள் பலரும் ஒருவர் மாறியொருவராக தினப்படியாகவே ஸ்ரீஸ்வாமியின் திருமேனி பாங்கைப்பற்றி த்ருப்திகரமாகவே எழுதிக் கொண்டிருந்தார்கள்; ஸ்ரீஸ்வாமிக்குத் திருநக்ஷத்திரம் தொண்ணூற்றைந்து ஆனாலும் இரண்டொரு வேளையே அநுஷ்டான லோபமும் ஞாபகக் குறைவும் ஏற்பட்டிருந்ததாக ஆப்தர்கள் எழுதியுள்ளார்கள். ப்ரஹ்மரதோத்ஸவம் முதலான மேற்காரியங்களில் சுற்றிலுமுள்ள அக்ரஹாரங்களிலிருந்தும் திவ்ய தேசங்களிலிருந்தும் ஸேவை ஸாதித்த ஸ்ரீவைஷ்ணவ ஸ்வாமிகளும் பாகவதோத்தமர்களும் ஆயிரக்கணக்கிலிருந்ததாக



அறிகிறோம். பதினைந்து வருஷங்களுக்கு மேலாக இளவரசு ஸ்தானத்தை அலங்கரித்தருளா நின்ற ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி (வடகரை) திருவல்லிக்கேணி ஜீயர்ஸ்வாமியின் அவதானத்தில் நடைபெற்று வரும் சரம கைங்கரிய விசேஷங்களின் திறமையைப் பற்றி யெழுத வேண்டியதுமுண்டோ ?

ஸ்ரீஸ்வாமி பரமபதித்தருளின மூன்றுவது நாள் காலை ஸ்ரீகாஞ்சியிலும் ஸ்வாமி மடத்திலிருந்து அறுபது ஸ்வாமிகளுக்குமேல் திருவிருத்தஸேவையுடனும் உபநிஷத்பாராயணத்துடனும் ஸ்தோத்ர ரத்நாநுஸந்தானத்துடனும் திருவீதி வலம் வந்து ஸ்ரீசூர்ணபரிபாலன மஹோத்ஸவம் நடத்தியது கண்கொள்ளாக்காட்சியாயிருந்தது.

திருநாடலங்கரித்தருளின ஸ்ரீஸ்வாமி பூர்வாச்ரமத்தில் முப்பது பிராயத்தில் இரண்டு ஸம்வத்ஸரம் ஸ்ரீகாஞ்சியில் எழுந்தருளியிருந்து வித்வத்ஸார்வபௌமரா யெழுந்தருளியிருந்த ஸ்ரீமதுபயவே குன்றபாக்கம் சீமாச்சார்ஸ்வாமியென்று ஜகத்விக்யாதரான மஹாஸ்வாமி ஸன்னிதானத்தில் ந்யாயசாஸ்த்ர க்ரோடபத்ரங்கள் வாசித்து ப்ரசண்ட நையாயிகராகி ஸ்ரீபாஷ்ய பகவத்விஷய ஸ்ரீவசநபூஷணாதிகளைப் பலகால் பலர்க்கு ப்ரவசனம் செய்தருளினது ஜகத் ப்ரஸித்தமான விஷயம்.

ஸ்ரீஸ்வாமி திருநாடலங்கரித்தருளினது ப்ராப்த காலத்திலானாலும் ஸ்ரீஸ்வாமியின் திருக்கல்யாண குணங்களை நினைக்க நினைக்க இந்த வியோகம் அடியேன் போல்வார்க்கு அஸஹ்யமாகவே யுள்ளது. இந்த ஸ்தானத்தைப் பரிபூரித்தருளும் வர்த்தமாந ஸ்ரீஸ்வாமியின் திருக்கல்யாண குணங்களினால் வருத்தமும் தீர்ந்து மகிழ்வோமாக. *தழை நல்லவின்பந் தலைப்பெய்து எங்குந் தழைக்கவே. நாலாறு மாதங்கள் கடந்த பின்பாவது ஸ்ரீஸ்வாமி [வர்த்தமாநர்] ஒரு சிறு யாத்திரை புறப்பட்டருளி அடியேன்போல்வாராய் ஆங்காங்கு எதிர்பார்த்திருக்குமன்பர்களை வாழ்வித்தருளினால் நலம் நலம் நலம்!

---

# புதுடில்லியில் மஹாபுருஷரது மறைவு.

புதுடில்லியில் கரோல்பாக் என்னுமிடத்தில் ஞானசீலவயோவ்ருத்தராயெழுந்தருளியிருந்த ஸ்ரீமதுபயவே P. V. S. ஐயங்கார் [ப்ரதிவாதி பயங்கரம் ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமி] சென்ற கார்த்திகை மாதத்தில் அவ்விடத்திலேயே திருநாட்டுக்கெழுந்தருளினரென்பதை மிக்க விஷாதத்துடன் தெரிவிக்கிறோம். தென்னாட்டிலிருந்து வடதிசை நோக்கிச் செல்வார்க்கெல்லாம் பல விதத்திலும் ஆதரவளிக்குமிந்த ஸ்வாமியின் வியோகம் ஆஸ்திக வுலகுக்கும் விசிஷ்ய ஸ்ரீவைஷ்ணவ மண்டலிக்கும் மஹத்தான துயரமேயாகும். இவருடைய திருக்குமாரர்கள் மிக்க குணசாலிகளாகவும் ப்ரதிஷ்டிதர்களாகவும் விளங்குவதால் நாம் ஒருவாறு தேறியிருக்க வழியுண்டு.



இவருடைய குடும்பத்திற்கு நமது மனப்பூர்வமான அநுதாபத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம். .... .... ....

## வானமாமலையிலிருந்து கிடைத்த கடிதம்.

இவ்விடம் ஸ்ரீ வரமங்கைத் தாயாரின் ஏழுநாள் கனுவுத்ஸவத்தின் ஆறாவது நாள் காலை, "இன்றிரவு பெருமாள் திருவடிஸாதிக்கப் போகிறார்" என்று நியமனமாயிற்று. மறுநாள் கனுவுத்ஸவப் பூர்த்தியன்று (தைமீ 2உ புதன்கிழமை) பெருமாளும் தாயாரும் சேற்றுத்தாமரையில் கனுத் தீர்த்தவாரி கண்டருளித் தாயாரின் பிறந்தகமாகிய மடத்துக்குப் 'பிறந்தகத்துச் சீர்' என்ற முறையில் எழுந்தருளி மடத்துக் கோவிலாழ்வாருக்குள் ஏறிவீற்றிருந்து, தாம் அணிந்திருந்த ஆடையாபரணங்களைக் களைந்து, மாமனார் ஸமர்ப்பித்த பட்டாடைகளையும் மகரகண்டி முதலிய திருவாபரணங்களையும் சாத்திக்கொண்டு

ஸ்ரீ ஸ்ரீஸ்வாமி ஸமர்ப்பித்த உக்கோரை அக்காரவடிசில் திரட்டுப்பால் இவற்றை அமுதுசெய்து சேஷித்த ப்ரஸாதத்தைப் பெரியஸ்வாமிக்கு அனுப்பியருளினர். ஸ்ரீஸ்வாமி அவற்றில் ஆமலகப்ரமாணம் ஸ்வீகரித்துக்கொண்டார். மாலை 5-மணிக்குத் ததீயாராதனம் முடிவுற்றது. பெருமாளும் தாயாரும் இரவு வகைப்பொடி விளங்கவில்லை. பணியாரங்கள் பழவகை குழம்புப்பால் இவை அமுது செய்து, மாமனூர் ஸமர்ப்பித்த பட்டாடையணிகளைக் களைந்து மாமனூரிடம் ஒப்புவித்துக் காலையில் தாம்களைந்துவைத்த கோவில் திருப்பரிவட்ட திருவாபரணங்களை அணிந்து, மாமனூருக்கு ஆழ்வார் பரிவட்டம் மாலை முதலான மரியாதைகளைச் செய்து விடைபெற்றுக் கோவிலுக்கு எழுந்தருளினர். அப்போது ஸ்ரீவரமங்கைத்தாயார் பெரியஸ்வாமியின் ஆத்மாவையும் கூடவே அழைத்துச்சென்றருளினள் என்னவேண்டியதாயிருக்கிறது.

இரவு 10 மணியிலிருந்து 1 மணிவரை கபக்கோளாறு அதிகமாகி ஸ்ரீஸ்வாமிக்குத் தளர்ச்சி ஏற்பட, இளைய ஸ்வாமியால் தொடங்கப்பெற்று ஸ்ரீவைஷ்ணவ ஸ்வாமிகள் அருளிச்செயல் ஸேவித்துச் சாத்துமுறை செய்து முடித்து, ஆர்த்தி – அர்ச்சிராதிகளை ஸ்ரீஸ்வாமி திருச்செவி சாத்தும்படி ஸேவித்தபோது, ஸ்ரீஸ்வாமியும் உதடுகளை அசைத்து அவற்றை அநுஸந்தித்த வண்ணமாகவே இருந்தார். பின்மாலை 4 மணி முதல் காலை 10 மணி வரை ஸ்ரீபாததீர்த்தமும் பாலமுதும் பத்து நிமிஷங்களுக்கு ஒரு தடவையாக இரண்டு மூன்று உத்தரணியளவு வாய்திறந்து ஸ்வீகரித்துப் பூர்ணஸ்ம்ருதியுடன் இருந்து காலை ஸந்நிதியில் திருவாராதனமும் மடத்தில் ததீயாராதனமும் முடிந்த பிறகு காலை 10-45 மணிக்குத் திருநாட்டுக்கெழுந்தருளினர் ஸ்ரீஸ்வாமி.

ஸ்ரீஸ்வாமியின் சரமதிருமேனியை, கூட இருந்த அந்தரங்கர் நாற்காலியில் பத்மாஸனமாக எழுந்தருளப் பண்ணி, முதன்மையான ஸ்வாமியின் ஆச்ரம மண்டபமாகிய அழகிய வரதனுக்குள்ளே எழுந்தருள்வித்துப் பின்பு கிணற்றங்கரையில் ஏகாந்த திருமஞ்சனம் முதலியன கண்டருளச் செய்து, மடத்தின் முன்பாகமாகிய ப்ராசீநமடத்து முன்மண்டபத்தில் சாய்வு நாற்காலியில் எழுந்தருளச் செய்து, மணவாளமாமுனிகள் ப்ரஸாதித்த கணையாழியைத் திருவிரலில்சாத்தித் திருமணித்தாவடங்களும் அணிவித்தனர். பிறகு மூன்று மணி அவகாசத்துக்கும்மேலாக, நாங்குனேரி ஊராரும் ஆழ்வார்திருநகரி

ஸ்ரீவில்லிபுத்தூர், மற்றும் சுற்றுவட்டாரம் இவற்றிலிருந்து எழுந்தருளிய ஸ்ரீவைஷ்ணவர்களும் மற்றும் நாநா ஜாதியர்களும் ஒழுங்குவரிசையில் நின்று ஸ்ரீஸ்வாமியை ப்ரதக்ஷிணம் செய்து ஸேவித்தபடியே இருந்தனர்.

பின்பு ஸ்ரீ பெரியஸ்வாமியின் முன்னியமனப்படியே, சரமகைங்கரியங்களை நடத்துவதற்காக ஆழ்வார் திருநகரி மடம் திருவாராதனம் ஸ்ரீ. உ. வே. ஸுந்தரராஜய்யங்கார் ஸ்வாமி ஸமயத்தில் எழுந்தருளி, மந்த்ரபூர்வகமாக ஸ்ரீ ஸ்வாமிக்கு அலங்காரத் திருமஞ்சனம் கண்டருளச் செய்தார். பெரியஸ்வாமியின் பூர்வாச்ரமத் திருக்குமாரர்களில் கநிஷ்டர் கூடவே இருந்தார். ஜ்யேஷ்டரும் பாக்யவசத்தால் திருமஞ்சன ஸமயத்துக்கு வந்து சேர்ந்தார்.

திருமஞ்சனமானதும் திருப்பரிவட்டங்கள் த்வாதசோர்த்வபுண்ட்ரங்கள் திருப்பவித்ரமாலைகள் பெரியபெருமாள் அனுப்பியருளிய மாலைப்ரஸாதங்கள் இவற்றைச் சாத்திக்கொண்ட ஸ்ரீ பெரியஸ்வாமி, "வையம் வாழ்த்த வந்துதித்த எதிராசமாமுனியோ, அவருடைய அபராவதாரமான மணவாளமாமுனியோ அவரது பொன்னடிக்கால் ஜீயரான ஸ்ரீவரமங்காமுனிதானோ" என்று எல்லோரும் வாய்வெருவும்படி அத்யாச்சர்யமாக ஸேவை ஸாதித்தருளினர்.

பிறகு ப்ரஹ்மரதம் திருவிருத்த கோஷ்டியுடனே தேரோடும் வீதிகளில் வலம்வந்து மடத்தின் வாசலில் நிற்க, ஸ்ரீ ஸ்வாமியின் சரமதிருமேனியைத் தங்கப் பல்லக்கில் எழுந்தருளிவிக்கப் பல்லக்கை ப்ரஹ்மரதத்தில் ஏற்றுவிக்க, ப்ரஹ்மரதம் இரவு 11 மணிக்குப் புறப்பட்டுக் கைப்பந்தங்கள் தீவட்டிகள் மத்தாப்புகள் கேஸ்லைட்டுகள் இவற்றின் ஒளி பரவவும் பேரிகாஹள திருச்சின்னங்கள் அதிரவும் பாண்டு - மேளவாத்யங்கள் ஒலிபரப்பவும் ஸ்ரீ சடகோபராமாநுஜ (இளைய) ஜீயர்ஸ்வாமி உபநிஷத் வேதபாராயண கோஷ்டியுடன் பின்தொடரவும் அடியார் குழாங்கள் புடைசூழவும், இரவு 1 மணிக்கு மூன்றுமைல் தூரத்தில் உள்ள திருவரசை அடைந்தது. பின்பு அதிலிருந்து இறங்கி, ஸ்ரீ மதுரகவிஸ்வாமியின் திருவரசையடுத்து, யதிஸம்ஸ்கார விதிப்படியே திருப்பள்ளிப்படுத்தப்பட்ட சரமதிருமேனியில் நின்றும், மணவாளமாமுனிகளின் ப்ரஸாதமாகிய உபதண்ட - கணையாழிகளையும் மற்றும் மாலைபரிவட்டங்களையும் களைந்து அர்ச்சகமுகேசுந "வானமாமலைராமாநுஜஜீயர்" என்று அருள்பாடிட்டு, அவை ஸ்ரீ சடகோபராமாநுஜ ஜீயருக்குச் சாத்தப்பெற்றன.

அதற்குப் பின்பு ஸ்ரீஸ்வாமி பெரிய ஸ்வாமியின் சரமவிக்ரஹத்தைப் ப்ரதக்ஷிணம் செய்துவிட்டுத் திருவரசிலிருந்து வெளியேறிச் சரமதிருமேனி

முன்பு எழுந்தருளிய தந்தப் பல்லக்கில் ஏறியெழுந்தருளி, சேற்றுத் தாமரைத் திருவாழிமண்டபத்துக்கு வந்து நீராடித் திருப்பரிவட்டம் திருமண்காப்பு சாத்திக் கொண்டு, தெய்வநாயகன் கோவில் கோபுரவாசலில் தண்டம் ஸமர்ப்பித்து மடத்துக்கெழுந்தருளி அழகிய வரதனுக்குள் சென்று தண்டனிட்டு, ஸ்ரீராமாநுஜ விலாஸத்துள்புக்கு, பெரியஸ்வாமியின் அநுஷ்டானவறையில் த்ரிதண்டத்தையும் திருமணித்தாவடத்தையும் வைத்திட்டுப் பெரியஸ்வாமியின் திண்ணையின் அருகே "இல்லம் வெறியோடிற்றாலோ என்மகளை எங்கும் காணேன்" என்று வாய்புலற்றி சோகாச்ருக்கள் உதிர்த்து. அங்கு இடப் பெற்றதொரு நாற்காலியில் 28ம் பட்டத்து ஸ்வாமியாய் வீற்றிருந்து ஸேவை ஸாதித்தருளினர். அப்போது பின் மாலை 2-30 மணி.

அடுத்தநாள் தொடங்கி முறையே ஸ்ரீ பெரிய ஸ்வாமியின் தீர்த்த திருவத்யயனவுத்ஸவத்துக்கான ஸகல காரியங்களையும் கவனித்து ஷஷ்டி உத்ஸவத்தையும் 13 நாட்களில் ஊர்த் ததீயாராதனத்தையும் மிக மிக விமரிசையாக நடத்தி, 11, 12, 13, உத்ஸவங்களில் ஸ்வாமிகளுக்கு வெள்ளிச்சொம்பு ஸ்ரீ ராமாநுஜன் வேஷ்டியுத்தரீயம் முதலியவற்றை ஸமர்ப்பிக்கவும், நாநா தேசங்களினின்றும் விசேஷஜ்ஞர்களை எழுந்தருளுவித்து ஸத்காரம் செய்யவும் பாக்கப் பாரித்து அவ்வண்ணமே தலைக்கட்டப் பெற்றது வாசாமகோசரம். 29—1—80 அன்று நாராயண பலி. இரவில் திருவாய்மொழி தொடங்கப் பெற்று இரண்டு பத்துக்கள் ஸேவிக்கப்பட்டது.

## 13-வது நாள் திருவத்யயனோத்ஸவச் சிறப்பு

தெய்வ நாயகப் பெருமாள் கோயில் நித்தியல் சாற்றி ஞாயிறு தளிகையும் அமுது செய்த பிறகு ஸ்ரீ ஸ்ரீஸ்வாமி மடத்தில் ஸ்ரீபாத தீர்த்தம் ஸாதித்து மங்களாசாஸனத்துக்கு எழுந்தருளி த்வஜஸ்தம்பத்தடியில் மணவாள மாமுனிகள் ஸாதித்தகலையாழியைச் சாத்திக் கொண்டு எழுந்தருளி அருளப் பாடு மரியாதைகளுடன் தெய்வநாயகனைத் திருவடிதொழுது பின்பு ஸ்ரீ உடையவர் மணவாள மாமுனிகளை மங்களா சாஸனம் செய்து மடத்துக் கெழுந்தருள, திருவாய் மொழி சாற்று முறை இனிது நிகழ்ந்தேறியது. பின்பு மடத்துக்கு வெளியே ஸன்னிதிக்கு முன்பு ஸ்ரீ ஸ்ரீஸ்வாமி எழுந்தருளி கோயில், திருமலை பெருமாள் கோயில் முதலிய பல திவ்ய தேசங்களிலிருந்து அநுக்ரஹிக்கப் பெற்ற "உடுத்துக் களைந்த பீதக வாடை" முதலியவற்றைச்

சாத்தி கொண்டு பின்பு அங்கேயே (மாலை 4 மணியளவில்) இராமாநுச நூற்றந்தாதியையும் தொடக்கி வைத்தருளினர். பின்பு இயல் கோஷ்டியாக கரும்புக்கழிகளுடன் 300 ஸ்வாமிகள் புடை சூழ ஸ்ரீ ஸ்ரீஸ்வாமி வீதியார எழுந்தருளி மாலை 6 மணிக்கு மடத்துக் கெழுந்தருளிச் சாற்றுமுறை வாழி திருநாமங்கள் ஸேவிக்கப் பெற்றன. பிறகு ததியாராதனம் சீரிய முறையில் நடைபெற்றது. இரவு 9 மணிக்கு மடம் அரங்க நகரப்பன் டோலோத்ஸவம் கண்டருளின பின்பு இரவு 12 மணிக்குத் தங்கப் பல்லக்கில் ஸ்ரீ ஸ்வாமியின் பட்டினப்பிரவேசப் புறப்பாடு ஆரம்பமாயிற்று. வேதவொலியும் "ஜய விஜயீ பவ!" என்னும் வாழ்த்தொலியும் பாண்டு, நாதசுர இன்னிசை யொலியும் எங்கும் நிறைந்து நிற்க ஸ்ரீ ஸ்வாமி ப்ரஹ்மோத்ஸவ பெரிய திருவீதி யெழுந்தருளி பின்மாலை 3 மணிக்கு மடத்துக்கு எழுந்தருளி ஆஸ்தானத்துச் சிங்காசனத்தே வீற்றிருக்க, அடியார்கள் அதிகாரிகள் எல்லோர்க்கும் சுருளமுது சாத்துப்படி வழங்கப் பெற்றது.

இங்ஙனம் தாஸாநுதாஸன் கலியன் மகாபூஷண ராமாநுஜய்யங்கார்.

## முக்கியமான அறிவிப்பு

ஸ்ரீ ஸ்ரீ பெரிய ஸ்வாமி திருநாடலங்கரிக்கும் ஸமயத்திலெடுத்த திருவுருவப் படமும் மற்றும் வர்த்தமான ஸ்வாமியின் பட்டாபிஷேகாதி ஸமயவிசேஷங்களின் படங்களும் இன்று எமக்குக் கண் கொள்ளாக் காட்சியாகக் கிடைத்திருக்கின்றன. அவை ப்ளாக் செய்விக்க சென்னைநகர்க்கு அனுப்பப்பட்டிருக்கின்றன. அவை அடுத்த ஸ்ரீராமாநுஜனில் வெளியிடப்படும்

இங்ஙனம் கார்யதர்சி

## அழகிய மறு பதிப்பு

நாலாயிர திவ்யப்பிரபந்தத்தினுள் இராமபிரானுடையவும் கண்ண பிரானுடையவும் குணசேஷ்டிதாநுபவபரமாகவரும் சந்தைகளைத் திரட்டி "ஆழ்வார்களுகந்த இராமன், ஆழ்வார்கள் புகழ்ந்த கண்ணன்" என்னும் பெயர் பூண்டபுத்தகமாக வெளியிட்டிருந்தோம் இருபதாண்டுகட்குமுன்பாக அப்புத்தகம் பன்னிரண்டாண்டுகட்கு மேலாகவே அரிதாகிவிட்டது. சென்ற (10—10—79) சேலம் செவ்வாய்ப் பேட்டையில் செல்வக்குடில மாளிகையில் வாழும் ப்ரபன்ன மணி உயர்திரு கு. காஞ்சிபர்ண செட்டியாரின் அறுபதாண்டு நிறைவு விழாவின் ஞாபக சின்னமாக மறுபதிப்பு செய்து நமது ஸ்ரீ ராமநுஜன்சார்பில் கோஷ்டி விநியோகம் செய்யப்பட்டது அதனை விரும்புகின்றவர்கள் இரண்டு ரூபாய் ஸ்டாம்பு அனுப்பியோ எம் ஓ செய்தோ நமது க்கிரந்தமாலை ஆபிஸில் பெறலாம்

# பரிஹாரமற்ற பரிதாபம்

ஸ்ரீமத் வேதமார்க்க ப்ரதிஷ்டாபநாசார்ய உபய வேதாந்த ப்ரவர்த்தகாசார்ய இத்யாதி பிருதாவளிகளை அந்வர்த்தமாகக் கொண்டு விளங்கி வந்தவரும் இமவந்தந் தொடங்கி யிருங்கடலளவும் பெரும் புகழ் பெற்றவரும். விசிஷ்ய ஸத்யகாம ஸத்யஸங்கல்ப பிருதபூஷிதருமான ஸ்ரீமத் பரமஹம்ஸபரிவ்ராஜகாசார்ய ஸ்ரீமந்நாராயண ராமாநுஜ ஜீயர்ஸ்வாமிகள் நேற்று மார்கழித் திங்கள் சுக்லத்வாதசியன்று [ஹைதராபாத் நகரத்தில்] திருநாடலங்கரித்த விஷயம் உலகமறிந்ததே. இந்த மஹாஸ்வாமியின் வைபவம் பூர்வாசாரியர்களின் வைபவம் போலே அப்ரமேயமாதலால் ஸங்க்ஷேபமாகக்கூட எழுதக் கை வரவில்லையடியேனுக்கு பெரியாழ்வார் தமது திருமொழியில் "கூடிக்கூடி யுற்றார்களிருந்து குற்றம நிற்க நற்றங்கள் பறைந்த" என்றொரு பாசுரம் பணித்திருப்பது அநுபவத்திற்குப் பொருந்தியது இந்த ஸ்வாமி விஷயத்தில் அந்தப் பாசுரத்தை நினைக்க லவலேசமும் ப்ரஸக்தியில்லை. அகில ஹேயப்ரத்யநீக கல்யாணைகதாநனான எம்பெருமான் பக்கலிலே "மயி தத்தாவதாநாயாம்" — "நிரவதிகுணக்ராமே ராமே சீராகஸி" இத்யாதி ஸங்கல்ப ஸூர்யோதய ஸூக்திப்படி குற்றங் கூற நேர்ந்தாலும் இந்த மஹாஸ்வாமி பக்கலிலே அஸூயுக்களும் ஒரு குற்றமும் கூற முடியாதென்பது ஸத்யம் ஸத்யம்.

"ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்ததாம் அபிவர்த்ததாம்" என்று ஆசாஸிப்பவர்களே மலிந்த இவ்வுலகின்கண் இந்த மஹாஸ்வாமி திருவவதரித்துச் செய்தருளின க்ருத்யவிசேஷங்கள் அதிமாநுஷங்கள் மட்டுமல்ல, அதிதைவங்களுமாம். ஐம்பது வருஷங்களுக்கு மேலாக இந்த மஹா ஸ்வாமியோடு நெருங்கிய பரிசயமுள்ள அடியேன் இவருடைய வைபவங்களைப் பற்றி உள்ளபடி யெழுதப்புக்கால் ராமாயணமும் மஹாபாரதமுமாக எழுதவேணும். அவ்வளவும் எழுத வல்லவனே அடியேன். ஆனால் இப்போது அச்சுக்கூடத்தின் அருமையும் காகிதத்தின் அருமையும் வலிதா யிருப்பதால்,

"ராத்ரிர் கமிஷ்யதி பவிஷ்யதி ஸுப்ரபாதம்
பாஸ்வாநுதேஷ்யதி ஹஸிஷ்யதி பங்கஜஸ்ரீ !
இத்தம் விசிந்தயதி கோசகதே த்விரேபே
ஹாஹந்த ஹந்த நளிநீம் கஜ உஜ்ஜஹார."

என்கிற ச்லோகாநுஸந்தானத்தோடு நிற்கிறேனிப்போது.

**P B அண்ணங்கராசாரியர், பத்ராதிபர்.**

ஸ்ரீ வானமாமலை மடம் 28ஆம் ஆஸ்தானம் வர்த்தமாந ஸ்வாமி

ஸ்ரீமத் பரமஹம்ஸ சடகோப ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி



# ஸ்ரீ ஸ்ரீ பெரிய ஸ்வாமியின் சரமாவஸ்தை



# ஸ்ரீ ஆண்டாளும் அருளாளனும் அண்ணங்கராசார்யரும்

## சித்தார்த்தி, மார்கழி திருப்பாவைக் காலட்சேபப் பொன்விழா அணிந்துரை

[ஸ்ரீ நா. வேணுகோபால நாயகர் பி. ஏ. பி. எல் அட்வகேட், செயலாளர் ஸ்ரீ வைணவ மகா சங்கம்.]

திருமாமணி மண்டபமோ! திருவாய்மொழி மண்டபமோ! எனத் திகைக்கத் தக்க, **சென்னை உப்புட்டூர் ஸ்ரீ ஆழ்வார் செட்டியார் இராமாநுச கூடத்தில்,** நம் திருப்பாவைப் பெருக்கர் ஜகதாசாரிய சிம்மாசனாதிபதி, பெருமாள் கோயில் பிரதிவாதி பயங்கரம், ஸ்ரீ அண்ணங்கராசாரிய சுவாமிகள் 1931ஆம் ஆண்டு தொடங்கி சித்தார்த்தி ஆண்டு மார்கழித் திங்களில் (1979 80 டிசம்பர், ஜனவரி) ஐம்பதாம் (பொன்விழா) திருப்பாவைக் காலட்சேப வேள்வியை நடத்தியருளியமைக்குப் பல்லாண்டு கூறுகிறேன்.

ஆண்டு தோறும் கார்த்திகைத் திங்கள் பிறந்தது முதல் அஃதும் திருமங்கை மன்னன் திருவிழா ஆரம்பமாகிவிட்டால், **பைங்கூழ்கள் மைத்தெழுந்த மாமுகிலே பார்த்திருக்கும்!** என்கின்ற கணக்கிலே, பக்த பாகவதப் பெருமக்கள், நமது காஞ்சி, ஸ்ரீ அண்ணங்கராசார்ய சுவாமிகளின் திருப்பாவைக் காலட்சேப விழாவினை எதிர்பார்த்திருப்பார்கள். நமது சுவாமிகளும், அவ்விதமே கார்த்திகைத் திங்கள் தொட்டே மார்கழித் திருப்பாவைக் காலட்சேப கோஷ்டியினராகிய, மெய்யடியார்கள் தம் ஈட்டம் கண்டிடக் கூடுமேல், அதுகாணும் கண்பயன் ஆவதே! எனப்பாரித்திருப்பர். ஆராத மனக்காதல் தொண்டர் தங்கள் குழாம் குழுமித் திருப்பாவை பலவும் பாடத் துடித்துக் கொண்டிருப்பர்!

ஆண்டுதோறும் ஒருமாதகாலம் திருப்பாவை அமுதத்தை அளிப்பதனால் ஏற்படும் ஆனந்தக் களிப்பும், ஆத்ம திருப்தியும் நமது சுவாமிகளின் திருமேனியில் புதுவாழ்வுச் சக்தியையும், புத்துணர்ச்சியையும் மேலிட வைக்கின்றது.

ஒருமாத காலம் திருப்பாவைத்தெள்ளமுதினை வாரி வழங்கியருளிய பின் **கல்லுயர்ந்த நெடுமதிள்சூழ் கச்சியம்பதிக்கு** எழுந்தருளவும்; நமது

சுவாமிகளை அத்தியூர் அருளாளன், பதினொரு மாத காலம் தன் திருவடி வாரத்தில் கைங்கரியங்களை உகந்தருளிப் பேணிக்காத்து, மார்கழியிலே சென்னையம்பதிக்குத் தன் ஆசியுடன் அனுப்பியருள்கிறான். இவ்விதமாக ஒவ்வொரு ஆண்டும் ஒருமாத காலம் பக்த பாகவதர்களின் அன்பிலும் பதினொரு மாத காலம் தேவராஜ-பகவத் கடாட்சத்திலும்-ஆகவே ஆண்டு முழுவதும் பகவத் பாகவதர்களின் அரவணைப்பிலே வளர்ந்தருள்வதால் நமது சுவாமிகள் பல்லாண்டு பல்லாண்டு எழுந்தருளிச் சேவைபுரிவார் என்பது திண்ணம்

## ஸ்ரீ ஆண்டாள் திருப்பாவையை அருளியது கண்ணனை முன்னிட்டே!

கண்ணனே அத்திகிரியில் எழுந்தருளியுள்ள அருளாளன் இது, நம்மாழ்வார் திருவாய் மொழியில் 'வானவர் கண்ணனை' (1 10—11) என்பதாலும் இவ்ய கவி பிள்ளைப் பெருமாள் அய்யங்கார், நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதியில் "அருளாளன் கச்சித் திருப்பதியாம் அத்தியூர்க் கண்ணன் தாள்" என்பதாலும் பெறப்படும். திருப்பாவைக் காலட்சேபச் சக்கரவர்த்தியாகப் பிற்காலத்தில் அதாவது இக்காலத்தில் விளங்கப்போகும் நம் ஸ்ரீ காஞ்சி அண்ணங்கராசாரிய சுவாமிகளைக் கடாக்ஷித்து தன் திருவடிவாரத்திலே பேணிக்காக்க விருக்கும் அத்தகிரிக் கண்ணனை அருளாளனிடம் ஸ்ரீ ஆண்டாள் தன் மனத்தைப் பறி கொடுத்து திருப்பாவையிலே ஐந்து பாசுரங்களாலே அருளாளனை மங்களா சாசனம் செய்தருள்வது வியக்கத் தக்கதாகும். அத்தியூரருளாளனது நாம சங்கீர்த்தனத்தில் ஆழங்கால் படும் ஸ்ரீ ஆண்டாள் இந்த ஐந்து பாசுரங்களாலே அர்த்த பஞ்சக ஞானத்தையும் வெளியிட்டருள்வது மேலும் வியக்கத் தக்கதாகும். தேவர், உம்பர், அமரர் என்பவை ஒரே பொருளைத் தரும் சொற்களே. அத்திகிரி அருளாளன் பிரமனின் யாகவேதியிலே, சுடராக அவதரித்ததைப் புராணம் கூறும்

முதலாவதாகக் கீழ்வானம் என்கிற (8ம்) பாசுரத்தில் தேவாதி தேவன் என்பதால சுவாமித்துவமும் வாத்சல்யமும் ஆ! ஆ! என்று ஆராய்ந்து அருள்வான் என்பதால் சௌசீல்யமும் இவ்விதம் அருளும் அருளாளன் அத்தியூரான என்று கொண்டால் சௌலப்யமும் பெறப்படுவதால் மிக்க இறை நிலையை ஸ்ரீ ஆண்டாள் அருளிச் செய்கிறாள்

இரண்டாவதாக, அம்பரமே என்னும் பாசுரத்தாலே 'உம்பர் கோமானே உறங்காது எழுந்திராய் என்று தேவாதி தேவனைத் துயில் உணர்த்துகையில்; எம்பெருமான் நந்தகோபாலனையும் கொம்பனார்க்கு எல்லாம் கொழுந்தாம், குலவிளக்காம் எம்பெருமாட்டி யசோதையையும் மெய்யாம் உயிர் நிலையின் (இத்தத்துவத்தின்) உதாரணங்களாகக் காட்டியருள்கிறார்.

அறம் செய்யும் நந்தகோபாலனின் ஞானமும், கண்ணனின் அழுகையும் அஞ்சி நோக்கும் அந்நோக்கும். அணிகொள் செஞ்சிறுவாய் நெளிப்பதுவும் தொழுகையும் கண்ட அசோதையின் ஆனந்தமும் இவர்களின் ஆத்ம லட்சணத்திற்குப் புறப்பொருள்களே. இவர்கள் கண்ணன்பால் கொண்டு ஒழுகிய அடிமைத் திறமே அந்தரங்க நிரூபகம்

மூன்றாவதாக முப்பத்து மூவர் பாசுரத்திலே, அமரர்க்கு முன் சென்று கப்பம் தவிர்க்கும் கலியைத் துயிலெழுப்பன் அயர்வறும் அமரர்கள் அதிபதியைத் துயிலெழுப்புவதேயாகும். துவய மந்திர உபதேசப்படி பிராட்டியைக் கொண்டே பெருமாளைச் சரண் அடைய வேண்டும் என்னும் தக்க நெறியைக் காட்டியருளும் முகத்தாலே செப்பன்ன மென் முலைச் செவ்வாய்ச் சிறு மருங்குல நப்பின்னை நங்காய் திருவே! துயில் எழாய்! என்று பிராட்டியை முன்னிடுகிறாள்!

நான்காவதாக, ஏற்ற கலங்கள் பாசுரத்தாலே, அத்தியூரில் பிரமனது வேதிகையில் தோற்றமாய் நின்ற சுடரே எனத் துயில் எழுப்புகையில், இறைவனை அடைவதற்குத் தடையாகித் தொக்கியலும் ஊழ்வினையை 'மாற்றார்' சொரூபத்தில் அமைத்தருள்கிறாள்.

கடைசியாக, ஐந்தாவதாக ஒருத்தி மகனாய் பாசுரத்திலே, (நான்முகனின் கச்சி யாகவேதியிலே) 'நெருப்பென்ன நின்ற நெடுமாலே' என அருளாளனை விளித்து அவனிடம் அருத்தித்து வந்த நல்வாழ்வாக வைணவர் தம்பேறாக புருஷார்த்தமாக வேண்டுவது திருத்தக்க செல்வமும், சேவகமும் பாடி வருத்தமும் தீர்ந்து மகிழும் பேறுதான்!

இவ்வாறாக, பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானவளும், நமது பெருமாள் கோயில் அண்ணனுக்கு முன்னானவளுமான ஸ்ரீ ஆண்டாள் அத்திகிரி அருளாளனிடம் ஈடுபட்டு இவ்வைந்து பாசுரங்களாலே அறிய வேண்டுவதான அர்த்தங்களை உள்ளடக்கிய அர்த்த பஞ்சகத்தை வெளியிட்டருளியது திருப்பாவைக் காலட்சேபத்திற்கென்றே இட்டுப் பிறந்த நமது பெருமாள் கோயில் ஸ்ரீ அண்ணங்கராசார்ய சுவாமிகளைப் பல்லாண்டு பல்லாண்டாகக் காத்தருள வேண்டுமெனப் பிரார்த்திற்பதற்கே என விண்ணப்பித்து நிற்கிறேன்.

## ஒரு வேண்டுகோள்!

ஸ்ரீய: பதியான பகவான் ப்ரஹ்லாதனுக்காக நரங்கலந்த சிங்கமாய்த் தோன்றி ஹிரண்யகசிபுவை ஸம்ஹரித்தது புராண ப்ரசித்தம், அத் திருக்கோலத்தில் ஸர்வாபீஷ்டங்களையும் பக்தர்களுக்கு அளிக்க அர்ச்சாவதார மூர்த்தியாக (பாண்டிச்சேரி மாநிலத்தில்) சிங்கிரிகோயிலென்னும் க்ருஷ்ணாரண்ய க்ஷேத்திரத்தில், கனகவல்லித்தாயார் சமேதராய் ஸ்ரீ உக்ர நரஸிம்ஹப்பெருமாளாகக் கோயில் கொண்டிருப்பது எல்லோரும் அறிந்ததே. க்ஷேத்ரம், மூர்த்தி, தீர்த்தம் முதலான எல்லா வகையிலும் புராண ப்ரசித்திபெற்ற இந்த ஸ்தலத்தில் வஸிஷ்டர் ப்ருகு முதலான அநேக ரிஷிகள் தபஸ் செய்ததாகவும் ஸ்தல புராணம் கூறுகிறது இத்தலத்து மூலவரான சிங்கப்பிரான் அர்ச்சைத் திருமேனிக்கு அலங்காரமாகவும் சேவிக்கும் பக்தர்கள் எம்பெருமான் பிரபாவத்தைச் செவ்வையாக அறிந்து சேவித்து அனுபவிக்கவும் எம்பெருமானுக்குக் கவசம் சாத்தும் கைங்கர்யம் நடத்த சில அன்பர்கள் முன்வருகிறார்கள். திருப்பதி திருமலை திருவேங்கடமுடையான் சந்நிதி ஸ்ரீமத் பரமஹம்ஸபரிவ்ராஜகாசார்யோபயவேதாந்த ப்ரதிஷ்டாபநாசார்யராய் எழுந்தருளியிருக்கும் சின்னகேள்விஜீயர் ஸ்வாமிகள் கைங்கர்யம் நடைபெற அனுக்ரஹம் செய்துள்ளார்கள். பெரியோர்களும் பக்தர்களும் மனமுவந்து தாங்களாகவே உதவிபுரிய முன்வரவேணுமென்று பிரார்த்திக்கிறோம் செப்புத் தகட்டில் வெள்ளியேற்றி முழு திருமேனிக்குக் கவசம் செய்து சாத்த சுமார் முப்பதினாயிரம் ரூபாய்வரை செலவாகுமென்று மதிப்பிடப்படுகிறது. எல்லாம் வல்ல எம்பெருமானின் அருளைப்பெறவும் ஸர்வாபீஷ்டங்களையும் அடையவும் இதைக்காணும் அன்பர்கள் தங்களாலியன்றவரை பொருளுதவி (வெள்ளி யாகவோ, ரொக்கமாகவோ) நன்கொடையாக அளித்து மஹத்தான கவச கைங்கர்யத்தைப் பூர்த்திபண்ணிக் கொடுக்கப் பிரார்த்திக்கிறோம்.

இப்படிக்கு,

சிங்கிரிகோயில் சிங்கப்பிரான் கவச கைங்கர்யக் குழுவினர்

காரியாலய விலாசம்:

**R. ஜெகந்நாதய்யங்கார், அட்வகேட்,**

92, பெருமாள் கோயில் வீதி, பாண்டிச்சேரி

# காஞ்சியில் திருப்பாவை சாற்று முறை

ஸ்ரீ காஞ்சியில் வேதவேதாந்த வைஜயந்தீ பாடசாலையில் ஸ்ரீ மதுபயவேதாந்த வித்வான் தி. அ. அக்காரக்கனி ஸம்பத் குமாராசார்ய ஸ்வாமியால நேற்று மார்கழித் திங்களில் நாடோறும் திருப்பாவை காலக்ஷேபம் நடத்தப்பட்டு வந்ததைப்பற்றித் தெரிவித்திருந்தோம். அதன் சாத்துமுறை தை மீ 1உ செவ்வாய்க் கிழமையன்று பகலில் விசேஷவைபவமாக நடைபெற்றது. அந்த ஸந்தர்ப்பத்தில் சேகரித்த புகைப்படங்கள் மேலே காணத்தக்கன இதே பாடசாலையில் பிரதி சனி ஞாயிறு தோறும் ஸ்ரீ அக்காரக்கனி ஸ்வாமி ஸ்ரீராமாயண உபந்யாஸம் நிகழ்த்தி வருகிறார் என்பதையும் தெரிவிக்கின்றோம்.

காஞ்சீயில் திருப்பாவை காலக்ஷேப சாற்றுமுறை.





29 *வானவர் தங்கள் சிந்தைபோல*

பெரிய திருமொழி இரண்டாம் பத்தின் முதற்பாட்டு *வானவர் தங்கள் சிந்தை போல* என்று தொடங்குவது. நித்ய ஸூரிகளின் திருவுள்ளம்போல வென்பது இதன் பொருள். இந்த உபமானத்திற்கு எதில் அந்வயம்? என்று பார்க்கில் ஸந்நிஹிதாந்வயம் கொண்டால் இரண்டாமடியிலேயே அந்வயிக்கும். வ்யவஹிதாந்வயம் கொண்டால் ஈற்றடியில் அந்வயிக்கும். மாதவமானவர் தங்கள் சிந்தையிலே வானவர் தங்கள் சிந்தையிற்போல அமர்ந்துறைகின்றுனெம்பெருமான் என்பது ஸந்நிஹிதாந்வயத்திஞல் பெறும் பொருள். மாதவமானவரென்றது—மஹாபாக்யசாலிகளென்றபடி. அன்னவர்களது நெஞ்சிலே நித்யஸூரிஹ்ருதயத்திற்போல இனிது உவந்து அமர்ந்துறைகின்றுனென்றதாயிற்று. இனி வ்யவஹிதாந்வயங்கொள்ளில்; என்னெஞ்சே! நீ வானவர் தங்கள் சிந்தைபோலத் திருவேங்கடமுடையானுக்கு அடிமைத்தொழில் பூண்டாயே என்றபடியாம். மனமே! இவ்விருள் தருமா ஞாலத்திலே பிறந்த என்னுடைய நெஞ்சாக நீயிருந்தும் இந்த மண்ணேருடைய நெஞ்சு எப்படி தீய விஷயங்களேயே சிந்தை செய்கிறதோ அப்படி நீ விஷயாந்தரங்களேச் சிந்தியாமல் ஒருநாளும் ஸம்ஸாரநாற்றமே கண்டறியாத நித்யஸூரிகளின் நெஞ்சுபோலத் திருவேங்கடமுடையான் திறத்திலே அடிமைத் தொழிலே ஏற்றுக் கொண்டாயே! உன்னுடைய பாக்கியமே பாக்கியம்! என்று தம் திருவுள்ளத்தைக் கொண்டாடினபடி. வ்யவஹிதாந்வயமெனினும் இதுவே ஆழ்வார்க்கு விவக்ஷிதம். .... .... .... (29)

30 *பிச்சச் சிறுபீலி பிடித்துலகில் பிணாந்தின் மடவாரவர்போல்*

பெரிய திருமொழி 2. 4. 8. *பிச்சச்சிறுபீலி பிடித்தென்று தொடங்கும் பாட்டிலே ஜைனர்களுக்குப் பிசாசஸ்த்ரீகளே உவமை கூறியிருக்கின்றது. ஜீவஹிம்ஸை செய்யலாகாதென்கிற நூற்கொள்கையிலே ஜைனர்கள் மிக்க ஊற்றமுடையராதலால் தரையில் நடக்கும் போது பூச்சிகளும் புழுக்களும் காலில் மிதிபட்டு முடிந்துபோகுமென்று ஜீவ ஹிம்ஸைக்கு வெருவி மயிலிறகுகளே விளக்குமாருகக் கட்டிக் கையிலேகொண்டு தரையை மெதுவாக விளக்கிக்கொண்டே நடந்து செல்லுவர்கள். *பிச்சச்சிறுபீலி பிடித்து* என்பதஞல் இது சொல்லப்

படுகிறது. அவர்கள் திகம்பரச்சாமிகளாய்த்திரிவது முண்டாதலால் "பிணந்தின் மடவாரவர்போல் அச்சமிலர் நாணிலர்" என்றது. பிணங்களைப் பிடுங்கித் தின்கிற பிசாசுகள் வெட்கமும் அச்சமுமின்றியே துணியில்லாமல் திரிவதுபோலத் திரிகின்றனராம் ஜைனர்கள். (30)

31 *குவளையங்கண்ணி கொல்லியம்பாவை*

பெரிய திருமொழியில் 2-7-1. *திவளும் வெண்மதியென்கிற பாசுரத்தில் (தாய்பாசுரமானவிதில்) பரகாலநாயகி *கொல்லியம்பாவை* எனப்படுகிறாள். இங்கு உவமைக் குறி இல்லையாயினும் கொல்லிப் பாவை போன்றவள்' என்றே பொருள்படுதலால் உபமா கர்ப்பமேயாகுமிது. வல்வில்ஓரி என்னும் சிற்றரசனுக்கு உரியதாய்க் கொல்லியென்னும் பெயர் கொண்டதான மலையின்கணுள்ள ஒரு பெண்பாற் பிரதிமை கொல்லிப்பாவையென்று பிரசித்திபெற்றது. இது தேவ சிற்பியால் அமைக்கப்பட்ட அழகிற்சிறந்த பதுமையாகும். அம்மலையிலுள்ள தேவரையும் முனிவரையும் துன்புறுத்த வருகின்ற அசுரரும் அரக்கரும் அப்பதுமையின் சிரிப்பைக்கண்டு மயங்கி உயிர் துறப்பார்களாம். அசுரரும் அரக்கரும் அங்கு அணுகும்போது அவர்களது வாடைபட்டவுடன் இது தானே நகைசெய்யுமாறு பொறியுள் வைக்கப்பட்டதென்பர். இது நகைத்துக் கொல்லுமென்பது "திரிபுரத்தைச் செற்றவனும் கொல்லிச் செழும்பாவையும் நகைக்கக். கற்றதெல்லாமிந்த நகை கண்டேயோ?" என்ற சித்திரமடற் பாடலினால் விளங்குகின்றது இப்பாவை கண்டாருள்ளமும் விழியும் கவர்ந்து பெருங்காம வேட்கையுறுவித்து இறுதியில் கொல்லுமென்றுங் கூறுவர். இது தெய்வ நிர்மாணமென்பர். ஒரு காலத்தில் திருமகள் தன்முன் போர்க்கெழுந்த அவுணர் மோஹித்து விழும்படி இக்கொல்லிப்பாவையுருக் கொண்டு ஆடினள் என்று சிலப்பதிகாரம் கூறும். "செருவெங்கோலமவுணர்நீங்கத் திருவின் செய்யோளாடிய பாவையும்" (கடலாடு காதை 60, 61.) என்றது காண்க. (இதைப்பற்றின மற்றும் விவரணங்கள் அடியேனுடைய திவ்யார்த்ததீபிகையுரையிற் காண்க.) .... (31)

32 *அலைகடல் போன்றிவரார்கொலென்ன அட்டபுயகரத்தேனென்றாரே.*

பெரிய திருமொழியில் (2–8–5)ல் எம்பெருமானுக்குக் கடலை உவமையாகச் சொல்லியுள்ளது. கடல்வண்ணனென்று பலபலவிடங்

களிற் சொல்லியிருந்தாலும் இவ்விடத்திற்கு நெடுவாசியுண்டு. கடலோடு ஸாம்யத்தை ஆழ்வார் தாமே மூலத்தில் உபபாதித்தருளியிருத்தலால். அஃது எங்ஙனேயென்னில்; *நீண்ட மலைகளும் மாமணியும் மலர்மேல்மங்கையும் சங்கமும் தங்குகின்ற அலைகடல் போன்றிவர்* என்று மூலமுள்ளது. கடலின் நிறம்போன்ற நிறமுடையவன் என்பதனலாகும் ஸாம்யமொன்று உண்டானலும் இங்குச் சொல்லுகிறது அதுவன்று கடலிலுள்ள வஸ்துக்களெல்லாம் எம்பெருமானிடத்துமுள்ளமைபற்றின உவமை சொல்லப்படுகிறது. முன்னெருகாலத்தில் மலைகளெல்லாம் சிறகுடனே பறந்து நாடு நகரங்களுக்குத் துன்பம் விளைவித்துக்கொண்டிருக்கையில் இந்திரன் தனது வஜ்ராயுதத்தினல் அவற்றின் சிறகுகளைத் துணித்துக்கொண்டுவர அப்போது மைநாகம் முதலிய பலமலைகள் கடலினுட்சென்று ஒளிந்துகொண்டு இற்றைக்கும் அவ்விடத்திலேயே தங்கிக்கிடக்கின்றனவென்று நூல்கள் கூறும். எம்பெருமானுடைய திருத்தோள்கள் *ஈரிரண்டுமால்வரைத் தோள்* என்றும் *குன்ருருந்திரடோளன்* என்றும் சொல்லுகிறபடியே மலைபோன்றிருத்தலால் கடலும் மலைகளையுடையது; எம்பெருமானும் மலைகளையுடையன் என்னலாயிருந்தது. கடல் ரத்னாகரமாகையாலே மாமணிகளையுடையது; எம்பெருமானும் 'குருமாமணிப்பூண்' எனப்பட்ட ஸ்ரீகௌஸ்துபத்தையுடையவன். கடலைக்கடைந்தபோது அதில் நின்றும் பிராட்டி பிறந்தனளென்று புராண வரலாருதலால் மலர்மேல் மங்கை தங்கப்பெற்றது கடல். எம்பெருமான் *அகலகில்லே னிறையுமென்று அலர்மேல்மங்கை யுறைமார்பன். சங்குக்கு உறைவிடம் கடல். எம்பெருமான் இடங்கைச் சங்கமுடையான். ஆகவே அலைகடல் போன்றவனயினன் என்று ஆழ்வார் தாமே நிரூபித்தருளினர். (32)

**33 *ஆய்ச்சியுரலோடார்க்கத் தறியார்ந்த கருங்களிறே போலநின்று.***

பெரிய திருமொழி 2-10-6. *உறியார்ந்த நறுவெண்ணெயென்னும் பாட்டில் வெண்ணெய் களவு செய்த குற்றத்திற்காக யசோதைப் பிராட்டியால் உரலோடு பிணைத்துக் கட்டிவைக்கப்பட்ட கண்ணன் அழுது அலமந்திருந்தபடிக்குஉவமை கூறுகின்ருராழ்வார்*தறியார்ந்த கருங்களிறே போல நின்று தடங்கண்கள் பனிமல்குந் தன்மையானே* என்று. தறி—யானைகட்டும் கம்பம்; உரலைத்தறியாகவும், கண்ணபிரானைக் கருங்களிருகவும் கூறினபடி. வேதாந்தவாசிரியர் இப்பாசுரத்தை

யடியொற்றியே யாதவாப்யுதயத்தில் (4–36.) *ஸஹாஸமைக்ஷந்த ஜநாஸ் ஸமந்தாத் ஆலாநிதம் நாகமிவாநபிஜ்ஞா:* என்று பணித்தார். (33)

34 *நீலத்தடவரை மாமணி நிகழக் கிடந்ததுபோல்*

பெரிய திருமொழி 2-10-6. *நீலத்தடவரையென்று தொடங்கும் பாட்டில்—நீலநிறத்ததொரு மலையின்மேலே மாமணி விளங்குவது போலத் திருப்பாற்கடலில் அரவணைமேற் கிடந்தாய் என்கிறது இதில், நீலமலையின் ஸ்தானத்திலே எம்பெருமானையும், மாமணியின் ஸ்தானத்திலே ஸ்ரீகௌஸ்துப மணியையும் உபமேயமாகக் கொள்ள வேணும். கொண்டால் 'அரவணை வேலைத்தலை' என்ற வாக்கியத்திற்கு உபமேயகோடியில் அந்வயமில்லையாகும். அந்வயம் கொள்ளவேணு மாகில், எம்பெருமானுடைய கரிய திருமேனியின் நிழலீட்டாலே பாற் கடலும் பாம்பணையும் நீலநிறம் பெற்றனவென்றுகொண்டு பாற்கடற் பாம்பணையை நீலத்தடவரைக்கு உபமேயமாகவும், எம்பெருமானை மாமணிக்கு உபமேயமாகவுங் கொள்ளலாம். இந்த யோஜனையில்— *அபி பணிபதிபாவாத் சுப்ரம் அந்தச் சயாளோர் மரகதஸுகுமாரை: ரங்கபர்த்துர் மயூகை:, ஸகலஜலதிபாநச்யாம ஜீமூதஜைத்ரம் புலகயதி விமாநம் பாவனம் லோசநே ந: *என்கிற ஸ்ரீரங்கராஜஸ்தவ சுலோகம் நினைக்கத்தகும். ஸ்ரீரங்க விமானத்தை வருணிக்கிற இந்த சுலோகத் தில் சொல்லப்படுவதாவது—திருவனந்தாழ்வானே ஸ்ரீரங்க விமான மாக வடிவெடுத்திருப்பதனால், திருவனந்தாழ்வான் வெண்ணிறமுடை யனுதலால் இந்த விமானமும் வெண்ணிறமுள்ளதாகக் காணப்பட வேண்டும்; ஆனால் கருங்கடலை முற்றும் பருகியெழுந்த காளமேகத் தையும் வென்று மிகவும் கறுத்து விளங்குகின்றது; (இது எதனுலென் னில்;) உள்ளே திருக்கண் வளர்ந்தருளும் திருவரங்கநாதனது நீல மேனியொளியின் வ்யாப்தியினுல்—என்று. .... ... (34)

35 *சிலம்பினிடைச் சிறுபரல்போல் பெரியமேரு திருக்குளம்பில் கணகணப்ப

பெரிய திருமொழி 4-4-8. "சிலம்பினிடையென்று தொடங்கும் பாட்டில்—எம்பெருமான் மஹாவராஹமூர்த்தியாகி அண்டபித்தியிற் சார்ந்துகிடந்த பூமிப்பிராட்டியை அதில் நின்று ஒட்டு விடுவித்தெடுக்

கும்போது மேருமலையானது வராஹ மூர்த்தியின் குளம்பில் ஒடுங்கிக் கிடக்கும்படி மிகப் பெரிய திருவுருவமெடுத்ததாகப் புராணங்கள் கூறுவதையுட்கொண்டு இப்பாசுரமருளிச் செய்யப்பட்டது. இதில் "சிறு பரல் சிலம்பினிடைப்போல் பெரிய மேரு திருக்குளம்பில் கணகணப்ப" என்று உபமான நிர்தேசமுள்ளது. "குரமத்யகதோயஸ்ய மேரு: கணகணாயதே" என்பது புராண ச்லோகம். ஒரு தண்டைச் சிலம்பிலே மிகச் சிறிய பருக்காங்கல்லை யிட்டுவைத்தால் அது எப்படி கணகண வென்றொலிக்குமோ, அப்படி பெரியமேருமலையானது வராஹ நாயனாருடைய திருக்குளம்பிலே கணகணத்ததென்கை. இதனால் வராஹப்பெருமாளுடைய எல்லையில்லாத பெருமை தெரிவிக்கப் பட்டதாம். .... .... .... .... .... (35)

## 36. *கறவாமடநாகுதன் கன்றுள்ளினாற்போல்.*

பெரிய திருமொழி 7-1-1. *கறவாமடநாகென்று தொடங்குமிப் பாட்டில் முதலடியில் உவமை கூறப்பட்டிருப்பது வியக்தம். இரண்டாமடி *மறவாதடியேன் உன்னையே யழைக்கின்றேன்* என்றுள்ளது. கன்றானது தனது தாய்ப்பசு பால் சுரவாவிடில் அதனையே நினைத்துக் கதறுமாபோலே பேறுபெறாத அடியேன் ஓயாது உன்னையே சொல்லிக் கதறுகின்றேன்—என்பது இங்குப் பொருள். பிள்ளையமுதனாரென்னு மாசிரியர் இப்பாட்டின் முதலடிக்குப் பொருள் சொல்லப் புகுந்து, கறவா மடநாகு—கறவாத பசுவானது, தன்கன்று உள்ளினாற்போல்—தன் கன்றை நினைக்குமாபோலே என்று பொருள் சொல்லி, இப்பொருள் இரண்டாமடியோடு சேராமையாலும் வேறுவகையாகப் பொருள் சொல்ல ஸ்புரியாமையாலும் திகைத்து நின்றார். நாகானது தன் கன்றை நினைக்குமாபோலேயென்றால் நாகின் ஸ்தானத்திலே ஆழ்வாரான தம்மையும், கன்றின் ஸ்தானத்திலே எம்பெருமானையும் கொள்ளவேண்டிவருகையாலே இது அஸங்கதமாகிறதே யென்று மிடிபட்டார். அவ்வளவிலே பட்டர்பாடே பொருள்கேட்ட வொருவர் அந்த கோஷ்டியிலே இருக்கக்கண்டு 'இவ்விடத்திற்கு பட்டர் எங்ஙனே நிர்வஹிக்கும்படி?' என்று கேட்க, 'நாகு என்றது முதல் வேற்றுமை யன்று; இரண்டாம் வேற்றுமை; நாகைத் தன்கன்று உள்ளினாற்போல் என்றருளிச் செய்யும்படி' என்றாராம். நாகுதன்—நாகினுடைய, கன்று—கன்றானது, உள்ளினாற்போல்—தாயையே நினைத்துக் கத்துமா

போலே என்றுமாம். *தாய்நினைந்த கன்றேயொக்க* என்பர் மேலும். .... .... .... ... (36)

37. *வள்ளலே! உன்தமர்க்கு என்றும் நமன்தமர் கள்ளர்போல்.

பெரிய திருமொழி 8-10-7. *வெள்ளைநீர் வெள்ளத்து* என்று தொடங்கும் பாசுரத்தில் கண்ணபுரத்துறையம்மானை நோக்கி 'வள்ளலே! உன்தமர்க்கென்றும் நமன் தமர் கள்ளர்போல்'' என்று பாகவதர்கள் விஷயத்தில் யமபடர்களைக் கள்ளர் போன்றவராகக் கூறினர். யமன் தன் தூதுவர்களை யழைத்து "பரிஹர மதுஸூதந ப்ரபந்நாந் ப்ரபுரஹம் அந்யந்ருணும் ந வைஷ்ணவாநாம்" என்று கட்டளையிட்டிருப்பதனாலும், "*சித்திரகுத்தனெழுத்தால் தென்புலக் கோன் பொறியொற்றி, வைத்த விலச்சினை மாற்றித் தூதுவரோடி யொளித்தார்* என்று பெரியாழ்வார் அருளிச் செய்திருக்கையாலும் யமகிங்காரர்கட்குக் கள்ளர்களை உவமை கூறினது பொருத்தமாயிற்று. (37)

38.—46 *பழமொழியால் பணிந்துரைத்த பாட்டிவை.

பெரிய திருமொழி. பத்தாம்பத்தில் *புள்ளுருவாகி நள்ளிருள் வந்த* என்று தொடங்கும் பதிகத்தின் நிகமனப் பாசுரத்தில் "பழமொழியால் பணிந்துரைத்த பாட்டிவைபாடப் பத்திமைபெருகிச் சித்தமும் திருவொடுமிகுமே" என்றருளிச் செய்யப்பட்டுள்ளது. ஒன்று முதலான ஒன்பது பாசுரங்களிலும் ஒவ்வொரு பழமொழியை யெடுத்துக் காட்டியிருப்பது உபமானமாகும். அவ்வொன்பதும் அடைவே விவரிக்கப்படுகின்றன. (38) *பிள்ளை தன்கையில் கிண்ணமேயொக்க* என்பது முதற்பாசுரத்திலிட்ட உபமானம். "பிள்ளைகையிற்கிண்ணம் மெள்ளவே கொள்ளலாம்" என்ற பழமொழி இப்பாசுரத்தில் அமைக்கப்பட்டது. மிக்க வலிமையுள்ளவர்கள் பொற்கிண்ண மொன்றைக் கவர்ந்தால் அதனை மீட்டுக் கைப்பற்றுவதற்கு ப்ரயாஸங்கொள்ள வேணும். அங்ஙனல்லாமல் சிறுபிள்ளை கவர்ந்த கிண்ணத்தைக் கைப் பற்றிக்கொள்ளவேண்டுமானால் அதற்காக ப்ரயாஸப்படவேண்டுவதில்லை. நினைத்தபோது எளிதாக வாங்கிக்கொள்ளுகிறேமென்று ஆறியிருக்கும்படியாக இருக்குமேயன்றிப் பதறவேண்டியிராது. அது போல இப்பரகாலநாயகி விஷயத்தில் எம்பெருமான் நினைத்திருப்பதாகச் சொன்னது, இவளை அவ்விதமாக அலக்ஷியம் செய்திருப்

பதாகச் சொன்னவாறு. இங்கு வியாக்கியான ஸ்ரீஸூக்தி—"பலவான்கள்கையில் கிண்ணியிறே வாங்க அரிது; பாலராயிருப்பார் கையிலது நினைத்தபோது வாங்குகிறோமென்று ஆறியிருக்கிறப்போல ஆறியிருக்கிறாயோ?" என்பதாம். .... ... ... (38)

39. *முன்றிலெழுந்த முருங்கையில் தேனா முன்கைவளை கவர்ந்தாயே*

அப்பதிகத்தில் இரண்டாம் பாட்டில் *நின்கோயில் முன்றிலெழுந்த முருங்கையில் தேனா முன்கைவளை கவர்ந்தாயே* என்று மற்றோர் உபமானம் கூறப்பட்டது. நெடுந்தூரத்திலிருப்பதன்றிக்கே ஸமீபத்தில் வாசலிலேயுள்ளதான ஒரு மரத்தில் தேனிருந்தால் அதனை எப்படி எளிதாகக் கவரலாகுமோ, அப்படி இவளது கைவளைகளைக் எளிதாகக் கவர்ந்துகொண்டாயே! என்றவாறு. கைவளை கவர்ந்ததாவது உடலிளைக்கச் செய்கை. ... .... (39)

40. *அங்கையில் வட்டாமிவளெனக் கருதுகின்றாயே.*

அப்பதிகத்தில் மூன்றாம்பாட்டில், கைப்பட்ட கருப்புக்கட்டி உபமானமாகக் கூறப்படுகிறது. வியாக்கியான ஸ்ரீஸூக்தி—"கையிலிருந்த கருப்புக்கட்டி தின்னவுமாய் பொகடவுமாயிருக்குமிறே, அப்படியே நினைத்திருக்கிறாயோ இவளையும." என்பதாம். உலகத்தில் எல்லார்க்கும் கைப்படாத பொருள்களில் விருப்பம் பெருகிச் செல்லுமேயன்றி அப்பொருள்தானே கைபட்டுவிட்டால் பிறகு அதில் உபேக்ஷையேயுண்டாகக் காண்கிறோமன்றோ? அது-போல இப்பரகால நாயகியும் கைப்பட்ட சரக்காதலால் இவளை அலக்ஷியம் செய்கிறாய்போலுமென்கை. .... .... ... (40)

4 . *உங்கள் தொண்டர்கைத்தண்டென்றவாறே.*

*மல்கிய தோளும் மானுரியதளுமென்கிற நாலாம் பாட்டினீற்றடியில் *இவளை நீ உங்கள் தொண்டர்கைத்தண்டென்றவாறே* என்று தொண்டர்கையிலுள்ள தண்டொன்று உபமானமாகக் கூறப்பட்டது. "*சாபமாநய! ஸௌமித்ரே!* என்று நினைத்தபோது வாங்கிக்காரியங்கொள்ளலாம்படி உரிய அடியார்கையில் ஆயுதத்தோபாதி நினைத்திராநின்றாய்" என்பது வியாக்கியான ஸ்ரீஸூக்தி அடியவர்களின் கையிலுள்ள ஆயுதத்தை வாங்குவது எப்படி அலக்ஷியமோ அப்படி இவளையும் அலக்ஷியம் செய்கிறாயே! என்றவாறு. (41)

42. *பெருவழி நாவற்கனியினுமெளியளிவளென*

*செருவழியாத மன்னர்கள்மாள* என்கிற ஐந்தாம் பாட்டினீற்றடியில் *பெருவழி நாவற்கனியினுமெளியளிவளெனப் பேசுகின்றாயே* என்றுள்ளது. பெரியதொருவழியிலே நாவற்பழம் விழுந்து கிடந்தால் அதைக் குனிந்தெடுத்தாலுமெடுக்கலாம். தவிரவும் தவிரலாம். அதுவே எட்டா நிலத்திலிருக்குமாகில் அபேக்ஷை விஞ்சியிருக்கும். ஸர்வஸாதாரணமான வழியிலே விழுந்து கிடக்கிறதென்னுங்காரணத்தினாலேயே உபேக்ஷாஸ்பதமாயிருக்குமாயிற்று. அதுபோலவே இவளையும் உபேக்ஷைக்கு உரியவளாகக் கருதுகின்றாய்போலுமென்றவாறு. ... ... ... .... (42)

43. *எருக்கிலைக்காக எறிமழுவோ லென்செய்வது.*

*அரக்கியராகம்புல்லெனவென்னுமாரும்பாட்டினீற்றடி *எருக்கிலைக்காக எறிமழுவோச்சலென்செய்வதெந்தை பிரானே* என்றுள்ளது. (பாசுரத்தின் கருத்தைச் சிறிது விவரித்தாக வேண்டும்.) *முருக்கிதழ்வாய்ச்சி முன்கைவெண்சங்கங்கொண்டு முன்னே நின்று போகாய்* என்பது மூன்றாமடி. பிரானே! இவளுடைய அதரத்தின் வைலக்ஷண்யத்தைச் சிறிது நினைக்கின்றாயில்லையே. இவளது உடலை ஈர்க்குப்போல இளைக்கச்செய்து கைவளைகளைக் கழலச்செய்தாயே! உன்னை மறந்தாவது இவள் பிழைக்கலாமென்று பார்த்தால் அது தனக்கும் இடமறும்படி உருவெளிப்பாட்டாலே நலிகின்றாயே! அபலையான இவளை உயிர்வாங்குதற்கு நீ இத்தனை ப்ரயாஸம் கொள்ள வேணுமோ? தன்னடையே பழுத்து நெகிழ்ந்து விழக்கடவதான எருக்கிலையை உதிர்ப்பதற்கு மழுப்படை கொண்டு வியாபரிப்பாருண்டோ? என்கிறாள் திருத்தாய். (மழுப்படை—கோடாலி.) (43)

44. *கோழிவெண்முட்டைக்கென் செய் தெந்தாய் குறுந்தடி.*

*ஆழியந்திண்டேரரசரென்னும் ஏழாம்பாட்டினீற்றடி *கோழிவெண்முட்டைக் கென்செய்வதெந்தாய்! குறுந்தடி நெடுங்கடல வண்ணா!* என்றுள்ளது. பூர்த்தியான பாசுரத்தின் கருத்தென்னவென்றால்; கடல் வண்ணனே! கண்ணழகியான இப்பரகால நாயகியின் மேனி நிறத்தைக் கவர்ந்து கொண்டாய்; இது செய்த நீ இவளை அடியோடு முடித்துவிடலாமே; இவளை சித்திரவதம் பண்ணவேணுமென்று

கருதியோ உருவெளிப்பாட்டாலே நலிகின்ருய்? (பரசுராமாவதாரத்தில்) கார்த்த வீர்யார்ஜுனனுடைய ஆயிரந்தோள்களேயும் கோடாலிப்படையிஞல் அறுத்துத் தள்ளின வீரத்தை நீ இவள் திறத்திலே காட்டுகின்ருய்போலும்; இவளை மாய்ப்பதற்கு இத்தனை ப்ரயாஸங் கொள்ள வேணுமோ? தன்னடையே உடைந்து போகக்கூடியதான கோழி முட்டையைத் தகர்ப்பதற்குச் சிறிய தடிதானும் வேணுமோ? ஏதுக்கு இத்தனை வீண்பிரயாஸம் கொள்ளுகிருய்? என்கை. ... (44)

## 45. * கவுட்கொண்ட நீராமிவளெனக் கருதுகின்ருயே *

* பொருந்தலனுகம் புள்ளுவந்தேறவென்னு மெட்டாம் பாட்டினீற்றடி * கருங்கடல்வண்ணு! கவுட்கொண்ட நீராமிவளெனக் கருதுகின்ருயே யென்றுள்ளது. கபோலமென்னும் வடசொல் கவுள் எனச் சிதைந்தது. வாய்க்குள் கொள்ளப்பட்ட நீர் உள்ளேயிழிகைக்கும் வெளியில் கொப்பளிக்கைக்கும் உரியதாயிருக்குமாபோலே 'இவளைக் கைப்பற்றிஞலும் பற்றுவோம், விட்டாலும் விட்டிடுவோம்'. என்று நினைத்திருக்கிருயேயன்றி பெருந்தடங்கண்ணியாகிய இவளேயோ நாம் உபேக்ஷிப்பதென்று திருவுள்ளம்பற்றுகிருயில்லையேயென்றவாறு.

## 46. * ஆரழலோம்பு மந்தணன் தோட்டமாக *

* நீரழல்வாஞய் நெடுநிலங்காலாயென்னுமொன்பதாம் பாட்டினீற்றடி * ஆரழலோம்புமந்தணன் தோட்டமாக நின்மனத்துவைத்தாயே யென்றுள்ளது. இதற்குச் சிலர் கருத்துக் கூறுவதாவது —நித்தியம் தீ வளர்த்து ஹோமம் செய்கிற அந்தணனுனவன் தன்னுடைய தோட்டத்திலுள்ள மரங்களையெல்லாம் கொஞ்சங்கொஞ்சமாக வெட்டி வெட்டி நெருப்புக்கு இரையாக்கி அழித்துவிடுவதுபோல இவளை நீ சிறிது சிறிதாக அழித்துவிடப் பார்க்கிருயே! என்றும். இது சுவையற்ற கருத்து. "அக்நி பரிசர்யை பண்ணவே காலம் போந்திருக்கிற ப்ராஹ்மணன்தோட்டமாக நினைத்தாயே" என்ற பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானத்தில் காட்டப்பட்ட கருத்தே சுவையுடையதாம். அல்லும் பகலும் அதற்கென்றே உழைக்கக்கூடியவனுடைய தோட்டம் செழிப்புற்றேருங்கிவள்ருமேயல்லது அக்நிஹோத்ரம் பண்ணிப் போது போக்குமவனுடைய தோட்டம் செழித்து வளரமாட்டாது; கவனிப்புக்

குறைவினால் பாழாய்ப்போய்விடும். ஆகவே, அக்நிஹோத்ரியானவனுக்குத் தோட்டத்திலே எப்படி அலக்ஷ்யதாபுத்தி இருக்குமோ அப்படி உனக்கும் இவளிடத்திலே ஆலக்ஷியம் உண்டாய்விட்டதே! என்பதாகவே கருத்தாகும். .... .... .... .... (46)

47. * மையார் கடலும் மணிவரையும் மாமுகிலும் கொய்யார்
குவளையுங் காயாவும் போன்றிருண்ட மெய்யான் *

பதினோராம்பத்து ஏழாம்பதிகத்தின் ஐந்தாம்பாட்டானவிதில் எம்பெருமானுடைய திருமேனிக்கு ஐந்து பொருள்கள் உபமானமாகக் கூறப்பட்டன. கடல்போலே எல்லை காணவொண்ணாததாய், மணிமலை போலே நெஞ்சுக்கு ஆகர்ஷகமாய், காளமேகம்போலே குளிர்ந்து விடாயைத் தீர்ப்பதாய், குவளைப்பூவும் காயாமலரும்போலே வைத்த கண் வாங்காதே பார்த்துக்கொண்டேயிருக்க வேண்டும்படியான திருமேனியையுடையவன் எம்பெருமான். ... ... ... (47)

48-54. * மாற்றமுளவாகிலும் பதிகத்தில் ஏழுபாசுரங்கள் *

பதினோராம்பத்தின் இறுதிப்பதிகமான *மாற்றமுளவில்—பிறவித்துன்பம் மிகக்கொடிது என்பதையும், அஃது அவசியம் போக்கிக் கொள்ள வேண்டியதொன்று என்பதையும், அது தம்மால் ஒழிக்கவொண்ணாதபடியுள்ளதனால் அதற்குத் தாம் மிக அஞ்சுகிறபடியையும் கூறுகையில் அவ்வச்சத்திற்கு ஒவ்வொரு பாட்டில் ஒவ்வொரு விதமான உபமானங்கூறுகின்றார். *மாற்றமுளவென்கிற முதற்பாட்டில் *ஆற்றங்கரை வாழ்மரம்போலஞ்சுகின்றேன்* என்கிறார். ஆற்றங்கரையிலுள்ள மரம் அந்த ஆற்றில் வெள்ளம் பெருகித் தன் வேரை அறுத்திடத் தொடங்கினால் அவ்வபாயத்தைப் பரிஹரித்துக்கொள்ளவாவது அத்தீங்குக்கு இடமின்றி விலகிநிற்கவாவது அத்துயரைத் தீர்ப்பதற்குப் பிறரைத் துணையாகக் கூப்பிடவாவது மாட்டாமல் முறிந்து விழுந்து அழிவுக்குள்ளாகும். தமது நிலைமை எப்பொழுதும் அபாயத்துக்கே இடமாதல் பற்றியும் தமக்கு வரும் துன்பத்தைத் தாமே போக்கிக்கொள்ள மாட்டாமைபற்றியும் தமக்கு அந்த மரத்தை உவமை கூறினார். .... .... .... .... .... (48)

49. *சீற்றமுளவென்கிற இரண்டாம்பாட்டிலே *காற்றத்திடைப்பட்ட கலவர்மனத்தை உவமை கூறுகின்றார். பெருங்காற்றிலே

அகப்பட்ட மரக்கலத்தினுள்ளே கிடப்பவர்களின் நெஞ்சுபோலே என்னெஞ்சம் துளங்குகிறதென்கிறார். அவர்கட்கு அச்சம் மேலிடுமேயன்றி அவ்வச்சத்தின் காரணத்தைத் தவிர்க்கும் சக்தியில்லையென்பார் அவர்கள்மனதைத் தமக்கு உவமைகூறி 'அஞ்சித் துளங்காநிற்பன்' என்றார். அம்மரக்கலத்திலுள்ளார் பலர்க்கும் உண்டாகிற அச்சத்தினளவு அச்சம் இவரொருவர்க்குமே உண்டாயிற்றென்பது தோன்ற 'கலவர்' எனப் பன்மையாய்க் கூறினார். அவர்களுக்குக் கவலை உடம்பு அழிதலில் மாத்திரம்; இவர்க்குக் கவலை—உயிர் பேறுபெருது அழிதலில், என நுண்ணிய வேறுபாடு தோன்றுமாறு 'ஆற்றத் துளங்காநிற்பன்' என்றார். அம்மரக்கலத்தாரது கலக்கத்தினும் தமது கலக்கம் மிக்கதென வெளியிட்டவாறு; ஆதலால், கலவர் மனம் இவர்க்கு ஒருபுடை யுவமையேயன்றி முற்றுவமையன்றென்க. ... .... (49)

50. *தூங்கார் பிறவிக்களென்கிற மூன்றாம் பாட்டில் *பாம்போடொரு கூரையிலே பயின்றாற்போலென்கிறார். இன்னமும் பலபல யோனிகளிலே என்னைப் புகும்படி செய்து மீட்காதிருந்திடுவையோவென்று கவலைகொண்டு அப்பிறவித் துன்பங்களை நினைத்து அஞ்சுகின்றேனாதலால் பொல்லாத பாம்புடனே ஒரு வீட்டில் பழகி வசிப்பதுபோலப் பல பொல்லாங்குகட்கு இடமான உடலோடு கூடி வாழ்வைதைப் பொருமல் என்மனம் தடுமாறுகின்றதென்கிறார். .... (50)

51. *உறுவார் பிறவிக்களென்கிற நான்காம் பாட்டில், இருபாடெரி கொள்ளியினுள் ளெறும்பேபோல் = எந்தப்பக்கம் போனாலும் தீமையையே அடையும்படி ஜநந மரணங்களிரண்டுக்கும் நடுவே அகப்பட்டு நோவுபடுகிற தன்மைக்கும் எங்கும் புகலிடமுமின்றிப் பொறுக்கவும் மாட்டாது படுகிறபாட்டுக்கும் ஏற்ற உவமை. தமது எளிமை தோன்ற எறும்பை உவமை கூறினார். .... ... (51

52. *கொள்ளக்குறையாதவென்னும் ஐந்தாம்பாட்டில் *வெள்ளத்திடைப்பட்ட நரியினத்தை உவமை கூறுகின்றார். நரியினம் போலே=வெள்ளத்திலகப்பட்ட ஒரு நரியின் வருத்தம் தமது கிலேசத்திற்கு ஒப்பாவதற்குப் போதாதென்னுங் கருத்தால் 'நரியினம் போலே உள்ளந்துளங்கா நிற்பன்' என்கிறார். நரிகள் பலவற்றுக்குமுண்டான பயம் இவரொருவர்க்குமே உண்டாயிற்றென்க. ... ... (52)

53. படைநின்ற வென்கிற ஆறாம்பாட்டிலே "இடையனெறிந்த மாமேயொத்திராமே" என்று அருளிச்செய்ததன் கருத்தாவது, ஆடு மாடுகள் எட்டித் தழை மேயலாம்படி இடையர்கள் சிலமரங்களின் கிளை களைக் கைக்கத்திகொண்டு பாதியளவு வெட்டிச் சாயவிட்டிருத்தல் இயல்பு; அம்மரம் ஒருசார் பசுமையாய் ஒருசார் உலர்ந்து கிடக்கும்; அதுபோல நான் ஞானலாபத்தாலுண்டான மகிழ்ச்சியைப் பெற்றத ஞேடு பேறுகிடைக்கப் பெறுமையாலுண்டான வாட்டத்தையும் அடைந் திராதபடி எனக்கு அருள்செய்யவேண்டுமென்கிருர். "நீடுபன் மலர் மாலையிட்டு நின்னிணையடி தொழுதேத்து மென் மனம்வாட நீ நினே யேல் ............அணியாலியம்மானே!" என்ருர் முன்னும். முழுவதும் ஆநந்தமே பெறும்படி அருளவேண்டுமென்றவாறு. வேர்பறிந்த கொடியின் மலர்களும் போட்டவிடத்திலே செவ்வி பெறும்படி செய்யுந் தேசத்திலே வாழ்பவ்ஞய் முதல் பறிந்ததற்குஞ் செவ்வி பெறுத்தவல்ல பரமசக்தியுக்தஞன உனக்கு வேர்பறியாது ஒருசாருலர்ந்தது மாத்திர மாயுள்ள மரத்துக்கு முழுவதும் பசுமையுண்டாம்படி செய்தல் எளிதே; ஆகவே, அம்மரம்போலே ஒருபுறம் தளிர்த்து ஒருபுறம் வாடும் எனக்கு நீ பூர்ணுநந்தத்தை விளேக்கத்தட்டில்லேயென இப்பாசுரத்தின் நய முணர்க. பல பொல்லாங்குகட்கு இடமான உடம்புடனே இவ்வுலகத் திலேயிருந்து தொண்டுசெய்தலிஞல் பூர்ணதிருப்தியுண்டாகாமை பற்றி நான் பரமபதத்தில் உன்னேயடையும்படி அருள்புரிய வேணு மென்று வேண்டிஞராயிற்று. .... .... .... (53)

54, வேம்பின்புழு வென்கிற ஏழாம் பாட்டிலே உபமானவாக்கி யமான முதலடியும் உபமேயவாக்கியமான இரண்டாமடியும் தனித்தனி நின்று இடையில் உவமவுருபு பெருமல் பிம்பப்பிரதிபிம்பபாவந்தோற்ற நிற்கின்றன. கீழ் "தொண்டர் தங்கள் சிந்தையுள்ளே முளைத்தெழுந்த தீங்கரும்பு" என்றும் "அமுதம்பொதி யின்சுவைக் கரும்பு" என்றும் 'கன்னலேக் கரும்பினிடைத்தேறலே" என்றும் ஸர்வரஸஞன எம்பெரு மானின் மிக்க இனிமைக்கும் அவ்வினிமையில் தாம் கொண்டுள்ள ஈடு பாட்டுக்கும் ஏற்பக் கரும்பை உவமை கூறிப் போந்தவர் அதற்கு மாருகவும், "இன்சுவைக் கட்டி" எனப்படுகிற அப்பரம்பொருளின் தகுதிக்குப் பொருந்தாதபடியும் வேம்பை உவமை கூறியது என்னென் னில் —யான் உன்னேயே விரும்பியிருப்பது நீ மிக இனியஞயிருத்தல் பற்றியே யன்று; நீ மிக இன்ஞதவஞ யிருப்பினும் உன்னேயே விரும்பி

யிருக்குங் கட்டப்பாடுண்டையேன் யான் என்னுங்கருத்து அமைய இங்ஙனங் கூறினரென்க. எம்பெருமானிடத்தில் நமக்குள்ள அடிமை குணங்காரணமாகவன்று; ஸ்வரூபப்ரயுக்தமென்கை. — (54)

**இனி இயற்பாவிலிருந்து உவமைகள் காட்டப்படும்.**

## 55. *வரைமேல் மரகதமேபோலத் திரைமேல் கிடந்தான்*

பொய்கையாழ்வாருடைய முதல் திருவந்தாதியில் "உரை மேற்கொண்டு என்னுள்ள மோவாதென்கிற அறுபத்தைந்தாம் பாட்டில் "வரைமேல் மரகதமே போலத் திரைமேல் கிடந்தானை" என்றவிது அபூதோபமை. திருப்பாற்கடலிலே எம்பெருமான் பள்ளி கொண்டிருப்பது—வெண்ணிறமானதொரு மலையில் மரகதக் கல்லைப் பதித்தாற்போன்றிருப்பதாகக் கூறினவிது இல்பொருளுவமை. .... (55)

## 56. *தாய்நாடு கன்றேபோல் தண்டுழாயானடிக்கே போய் நாடிக்கொள்ளும்*

முதல் திருவந்தாதியில் "தெளிதாகவுள்ளத்தையென்று தொடங்கும் முப்பதாவது பாட்டில், நன்குணர்வார் சிந்தையானது தண்டுழாயானடியை நாடிக்கொள்ளுந் தன்மைக்கு, "தாய்நாடு கன்றே போல்" என்கிறவுவமை கொடுக்கப்பட்டது. மனத்தைப் பட்டிமேய வொண்ணாதபடியடக்கி எம்பெருமானோடு தமக்குள்ள உறவை யறிந்திருப்பவர்களின் மனமானது மற்றெவரையும் பற்றாமலும் ஐம்புலன்களிற் செல்லாமலும் அப்பெருமானையே பற்றிக்கொண்டு மிக்க ஆவலுடன் சென்றுகிட்டும். (இஃது எப்படி போலவென்னில்;) ஒரு கன்றானது பல்லாயிரம் பசுக்களின் திரளினுள்ளே தனது தாயைக் கண்டு பிடித்துக் கொள்வதுபோல. இதற்கு ஸம்பந்தவுணர்ச்சியே காரணம். ஸம்பந்த ஜ்ஞானமில்லாதவர்களுக்கு ஒரு நாளும் எம்பெருமானைக் கிட்டுதல் இயலாது. அஃது உள்ளவர்களுக்கு அது மிகவும் எளிது—என்றதாயிற்று .... ... .... ... (56)

## 57. *மகிழலகொன்றேபோல் மாறும் பலயாக்கை*

முதல் திருவந்தாதியில் நாற்பத்தொன்பதாம் பாட்டில் "மகிழல கொன்றே போலென்கிற உவமை கூறப்பட்டுள்ளது. தேவயோனிகளென்றும் மனுஷ்ய யோனிகளென்றும் திர்யக் யோனிகளென்றும்

பலவகைப்பட்டயோனிகளில் பிறப்பதும் இறப்பதுமாகி ஸம்ஸாரத்தைத் தொலைத்துக்கொள்ள விருப்பமுடையவர்களுக்கே எம்பெருமானைக் காணுதல் கைகூடுமென்கிறவிது இப்பாட்டுக்கு விவக்ஷிதம். பகவத் ஸங்கல்பத்தாலே கர்மானுகுணமாக உத்க்ருஷ்டமாகவும் அபக்ருஷ்டமாகவும் பல வகைப்பட்ட ப்ரஹ்மாதி பிபீலிகாந்தமான சரீரங்கள் மாறி மாறி வருவதற்கு ஏற்ற உவமை "மகிழலகொன்றேபோல்" என்பது. பலகறை, மகிழம்விதை முதலியவற்றை வைத்துக் கொண்டு ஆடுகிற முறையுண்டே. அதில் ஒரு மகிழ்விதையே சற்றுப்போது காணிஸ் தானத்திலும், சற்றுப்போது கோடிஸ்தானத்திலும் மாறிமாறி வந்து கொண்டிருக்கும். இதனை பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவ உத்தர சதகத்தில் "படுநைகவராடிகேவ" என்றருளிச்செய்தார். .... .... (57)

**58. *வனத்திடரை யேரியாம் வண்ணமியற்று மிதுவல்லால் மாரி யார் பெய்கிற்பார்?***

பூதத்தாழ்வாருடைய இரண்டாந்திருவந்தாதியில் 'தனக்கடிமை பட்டதென்று தொடங்கும் பதினாறும் பாட்டில் பின்னடியானவிதில் உவமைக்குறி இல்லையாயினும் உபமான கர்ப்பமாகவே அது கூறப்படுவதாம். மேகம்பெய்யும் தண்ணீர் மேடான நிலத்தில் தங்காது; அது தங்குவதற்காக மேட்டையிடித்துப் பள்ளம் செய்யப் படுவதுண்டு. பள்ள நிலத்தில் தண்ணீர் தேங்குமானாலும் தண்ணீரை நம்மால் வருவிக்க முடியாதன்றோ. அது தானாகப் பெய்தாலுண்டு. மேட்டைச் சரித்துப் பள்ளமாக்கினதற்குப் பயன் என்னவென்றால், பெய்கிற மழையைத் தங்கச்செய்வதேயாம். இதுபோல, நாம் சில காரியங்கள் செய்வது எம்பெருமானருளுக்கு ஸாதனமாகாது; அவ்வருள்வெள்ளம் தன்னடையே பெருகும்போது அதற்கு நாம் இலக்காகப் பெறுவோமத்தனை—என்றவாறு. அடியேனுடைய திவ்யார்த்ததீபிகையில் விரிவு காணக. ... .... ... .... (58)

**59. *திகிரி சுடரென்றும் வெண்சங்கம் மதியென்றும் பார்த்து***

பேயாழ்வாருடைய மூன்றாந் திருவந்தாதியில் "ஆங்கு மலரும் குவியுமாலுந்திவாய்" என்னும் அறுபத்தேழாம் பாசுரத்தில் திருவாழியாழ்வானுக்கு ஸூர்யனை உபமானமாகவும், திருச்சங்காழ்வானுக்குச் சந்திரனை உபமானமாகவும் திருவுள்ளம் பற்றி ஒரு உல்லேகம் செய்தருளுகிறார். சேஷசாயியான எம்பெருமானுடைய திருநாபிக்கமலம்

நன்ருக விகஸித்ததாகவுமிராதே நன்ருக மூடிக்கொண்டதாகவுமிராதே மலர்வதும் மொட்டிப்பதுமாயிருப்பதாக முன்னடிகளிற்கூறிப் பின்னடிகளில் அதற்கு ஹேதுவையருளிச்செய்கிருர். எம்பெருமானுடைய வலத்திருக்கையிலுள்ள திருவாழியாழ்வான் "பாஸ்கரகோடி துல்ய"ஞைகயாலே ஸூர்யனைப் பார்த்துத் தாமரை விகஸிக்குமே: இடத்திருக்கையில் திகழும் சங்காழ்வான் "சந்திரமண்டலம்போல்" என்ற நாச்சியார் திருமொழியின்படி சந்திரனேடொத்திருக்கையாலே சந்திரனைப் பார்த்துத் தாமரை மூடிக்கொள்ளுமே. இவ்விரு நிலைமையும் மாறி மாறி நிகழ்வதாகச் சொல்லிற்று. .... .... (59)

## 60. * வேம்புங் கறியாகுமேன்று *.

நான்முகன் திருவந்தாதியில் (94) "மெய்தெளிந்தாரென்செய்யார்" என்னும் பாட்டின் ஈற்றடி "வேம்பும் கறியாகுமேன்று" என்பதில் உவமவுருபு இல்லையாயினும் இஃது உவமையாகவே வைத்துக் கூறப்பட்டது. இப்பாட்டின் கருத்தை நன்குணர்ந்தால் இஃது உவமையேயென்பது தெளிவாகும். கருத்தாவது அடியேன் சீலமில்லாச் சிறியேனாயினும் அடியேன் பக்கல் அருள் செய்ய வேணும். குற்றமே வடிவாகவுள்ளவர்களை இகழ்ந்தொழிய வேண்டுமேயன்றிக் கைக்கொள்வது தகாது என்று திருவுள்ளம் பற்றலாகாது. வேப்பிலை கைக்குமென்ருலும் இதைக் கறியாகச் சமைத்து உட்கொள்ளவேணுமென்னும் விருப்புடையார்க்கு அது கறியாகின்றதன்ருே? அப்படியே குற்றவாளரைக் கைக்கொள்வதே சீரியது என்று தெளிந்தவர்கள் என்போல்வாரை ஏன் அங்கீகரிக்கமாட்டார்கள்? அங்கீகரித்தே தீருவர்கள் ஸ்வாமிந்! அடியேனுடைய குற்றங்களை நற்றமாகவே கொண்டோ அல்லது அவற்றில் திருக்கண் செலுத்தாமலோ அடியேனை விஷயீகரித்தருள வேணுமென்பதாம். இதற்குச்சேர—ஈற்றடிக்கு, வேம்பும் கறியாவது போல என்று பொருள் தேறும். ஏன்று என்பதற்கு வேணுமென்று விரும்புமளவில் என்று பொருள். .... .... .... (60)

## 61. *ஒண்முத்தும் பைம்பொன்னுமேந்தி ஓரோ குடங்கைப்பெரியன கெண்டைக்குலம்.*

திருவிருத்தத்தில் (11) "அரியன யாமின்று காண்கின்றன" என்னும் பாசுரத்தில் ஒண்முத்தும் பைம்பொன்னும்—கெண்டைக்குலம்" என்கிற இம்மூன்று சொற்களும் உபமேயத்தை மறைத்து உப

மானத்தை மட்டுமே சொன்னவை. முத்து என்றது முத்துப்போன்ற கண்ணீரரும்பைச் சொல்லும். பைம் பொன் என்றது 'பொன் குலாம் பயலே' எனப்படும் பசலை நிறத்தைச் சொல்லும். கெண்டை யென்றது கயல்போன்ற கண்ணைச்சொல்லும். இங்கு இப்பாசுரத்தின் சுவைப் பொருளையறிவது நன்று. பொருள் படைப்பதற்காக நாயகியைப் பிரிந்துபோகவேணுமென்றெண்ணிய நாயகன் அவளோடு சொல்லாமல் சடக்கெனப் பிரிந்தாலும், அல்லது தேசாந்தரம் போய்வருவதாயிருக்கிறேனென்று பிரிவை ப்ரஸங்கித்தாலும் அவள் மரணபர்யந்தமான கஷ்டத்தை யடைந்திடுவளென்று கருதி அவள் ஆற்றுமாறு மெதுவாகப் பிரிவைத் தெரிவிக்கத் தொடங்கி லோகாபிராமமாகப் பலப்ரஸ்தாவங்கள் பண்ணுமடைவிலே 'உலகத்திலே பொருளீட்டுவதற்காகப் பிரிந்து தேசாந்தரம் போவதென்கிறவொரு விஷயமுண்டு எனப் பொதுப்படையானவொரு ப்ரஸ்தாவமெடுத்துக்கூற, அவள் அது கேட்டவுடன் இப்போது இவர் இவ்விஷயம் ப்ரஸ்தாவித்தது வெறுமனல்ல, இது லோகாபிராமவார்த்தைகளிற் சேர்ந்ததல்ல, நம்மைப் பிரிந்து போவதற்காகவே இது அவதாரிகையாகக் கூறின கூற்றாயிருக்கவேண்டும் என நினைத்து, பிரிவு உண்டாய்விட்டதாகவே நினைத்து வருந்திப் பிரிவாற்றாமையாலுண்டாகும் பசப்பென்கிற நிறவேறுபாட்டையடைந்து கண்ணுங் கண்ணீருமாயிருக்க, அதைக் கண்டகாதலன் 'நாம் பிரிந்து போவதாகச்சொல்லாதிருக்கவும் வெறும் வார்த்தையிலே நமது உட்கருத்தைத் தெரிந்துகொண்ட இவளது நிலைமை இப்படியாயிற்றே' யென்று வியந்து தோழியை நோக்கிக் கூறிய பாசுரமாக அமைந்ததிப்பாட்டு. ஆழ்வார்க்கு எம்பெருமானுடைய பிரிவின் ப்ரஸ்தாவமும் அஸஹ்யமாகித் திருமேனி நிறவேறுபாடுற்றுக் கண்ணீர் பெருக நிற்கும் தன்மை இதனால் தெரிவிக்கப் பட்டதாயிற்று. .... .... .... (61)

62. *வன்காற்றறைய வொருங்கேமறிந்துகிடந்தலர்ந்த கமலத்தடம்போல் பொலிந்தன எம்பிரான தடங்கண்கள்*

திருவிருத்தத்தில் (42) *வன்காற்றறையவென்னும் பாசுரத்தில் ஆழ்வார் தம்மீது எம்பெருமானுடைய திருக்கண்கள் ப்ரஸரித்தமைக்குக் கூறும் உபமானம் *வன்காற்றறைய வொருங்கே மறிந்து கிடந்தலர்ந்த மென்காற் கமலத்தடம்போல் பொலிந்தன வென்பது. ஒரு தாமரைத்தடாகம் வலியகாற்று வீசுதலால் ஒரு பக்கமாகச்சாய்ந்து

கிடந்து மலர்ந்தாற்போலுள்ளன எம்பிரானுடைய தடங்கண்கள் என்றபடி. தடையில்லாத கருணையால் தூண்டப்பட்டது எம்பெருமானுடைய கடாக்ஷவீக்ஷணம்—என்று காட்ட *வன்காற்றறைய* எனப்பட்டது. *காருண்யமாருதா நீதை:* என்றாரே திருக்கச்சிநம்பிகள். பட்டர் இந்தப் பாசுரத்தைத் திருவுள்ளம்பற்றியே ஸ்ரீரங்கராஜஸ்தவ-உத்தர சதகத்தில் 'வாத்யாவ்யாலோலத் கமலதடாக தாண்டவேந'' என்றருளிச் செய்தார். வாதாநாம் ஸமூஹ:—வாத்யா.............. ... (62)

**63. *எப்படி ஊரா மிலைக்கக் குருட்டா மிலைக்குமென்னும்***

திருவிருத்தத்தில் (94) *மைப்படி மேனியும் செந்தாமரைக் கண்ணும் வைதிகரே என்கிற பாசுரம் ஆழ்வாருடைய நைச்சியாநுஸந்தானத்தில் தலைநின்ற பாசுரம். எம்பெருமானே! வேதவேதாந்த ஞானத்திற் சிறந்த மஹான்களே உன்னைப் பரிபூர்ணாநுபவம் பண்ணுவதற்கு உரியராவர். அறிவிலியான நான் அநுபவித்தவன்போலப் பேசுவது எங்ஙனேயிரா நின்றதென்னில் "எப்படி ஊராமிலைக்கக் குருட்டாமிலைக்குமென்னும் அப்படியானுஞ் சொன்னேன்" என்று இது உவமையாகக் கூறப்பட்டது. காட்டிலே மேயச்சென்ற பசுக்கள் மாலைப் பொழுதில் ஊருக்குத் திரும்பி வருகையில், நன்றாகக் கண் தெரிந்த பசுக்கள் நம்மிடத்திற்கு வந்துவிட்டோமென்று மகிழ்ந்து அம்மகிழ்ச்சிக்குப் போக்கு வீடாகக் கனைத்தல் செய்ய, கண்ணில்லாத குருட்டுப்பசுவும் அது கேட்டுத் தான் இன்னதென்றறியாமலே ஒக்கக் கனைக்குமென்று உலகம் சொல்லுகிற விதமாகவே, வேதவைதிக மஹா புருஷர்கள் சொன்ன பாசுரத்தைக் கேட்டுவைத்து நானுஞ்சொன்னேனத்தனை. என் ஞானத்தாலே கண்டு என் சக்தியாலே சொல்ல வல்லேனல்லேன் என்றாராயிற்று. இப்பாசுரத்தை அடியொற்றியே பட்டர் ஸ்ரீ குணரத்நகோசத்தில் *இத்யுக்தி கைதவசதேந விடம்பயாமி தாந் அம்ப ஸத்யவசஸ: புருஷாந் புராணாந்* என்கிற சுலோக மருளிச்செய்தார். .... .... ... ... (63)

**64. *நன்றேளிருக்க மணைநீராட்டி***

திருவாசிரியத்தில் "ஒவ்வுலகினதியல்வே" என்கிற ஆறும் பாட்டில், ப்ராப்த சேஷியான எம்பெருமானுக்கு வழிபாடு ஒன்றும் செய்யாதே தேவதாந்தர பஜனம் பண்ணி அனர்த்தப்பட்டுத் தொலையுமவர்களைப்பற்றி ஆழ்வார் நிர்வேதங்கொண் டருளிச்செய்கையில்

[illegible]

என்றேருளிருக்க மணைநீராட்டி'' என்றவிது உபமானகர்ப்பமான வார்த்தை. பெற்ற தாயிருக்க, அவளுக்கு உபசாரம் செய்வதைவிட்டு மணைக்கட்டைக்கு உபசாரம் செய்யுமாபோலே—என்றபடி. திருமங்கையாழ்வாரும் பெரிய திருமொழியில் தேவதாந்தர பஜனம் பண்ணுமவர்களை நிந்திக்கும் பதிகத்தில் (11-6). *மைந்நின்ற கருங்கடல் வாயென் பதில்) (6.) *போயிருக்க மற்றிங்கோர் புதுத்தெய்வங் கொண்டாடுந் தொண்டீர்! பெற்றதாயிருக்க மணைவெந்நீராட்டுதிரோ?''* என்றருளிச் செய்தது இப்பாசுரத்தை யடியொற்றியே. மணையென்றது அசேதந வஸ்துக்களையெல்லாம் சொன்னபடி. நீராட்டி யென்றது உபசாரங்கள் பலவற்றையும் சொன்னபடி. இவ்விடத்து அறியவேண்டிய விரிவுகள் அடியேனுடைய திவ்யார்த்த தீபிகையுரையில் காணத்தக்கன. (64)

**65. *முறைமுறையின் தாதிலகுபூத்தெளித்தா லொவ்வாதே***

பெரிய திருவந்தாதியில் (61) ■இறைமுறையான் சேவடிமேல்■ என்னும் பாசுரத்தில் ■தாழ்விசும்பின் மீதிலகித் தான்கிடக்கும்மீன்—மண்ணளந்தவந்நாள் வானுடர்சூடிப் பூத்தெளித்தா லொவ்வாதே■ என்றருளிச் செய்தவிது பரமவிலக்ஷணமான உல்லேகம். எம்பெருமான் முன்பு உலகளந்தருளின காலத்திலே மேலுலகத்திலுள்ளாரெல்லாரும் அப்பெருமானது திருவடியின்மேல் புஷ்பங்களைத் தூவினார்களன்றே; அவையே இப்போதும் நக்ஷத்திரங்களாகக் காணப்படுகின்றனவென்று உத்ப்ரேக்ஷை. நக்ஷத்திரங்கள் முல்லைப்பூப்போலேயிருத்தலால் அவை விஷ்ணுபதமென்கிற ஆகாசத்திலே நிரம்பியிருக்கையாலும் ஆழ்வாருடைய திருவுள்ளத்திலே எப்போதும் உலகளந்த வரலாறு ஊறிக்கிடக்கையாலும் இங்ஙனே உத்ப்ரேக்ஷித்தபடி, (மீன்—நக்ஷத்திரம்.) .... .... .... .... (65)

**66. *ஏரார்முயல்விட்டுக் காக்கைப் பின்போவதே***

சிறிய திருமடலில் திருமங்கையாழ்வார் அர்ச்சாவதார ப்ராவண்யாதிசயத்தாலே மோக்ஷ புருஷார்த்தத்தை இல்லை செய்தார். உடனே 'அப்படியொரு புருஷார்த்த முண்டானாலும் அது இவ்விடத்து அநுபவத்திற் காட்டிலும் சீரியதன்று, சிறியதேயென்று கூறத் திருவுள்ளம் பற்றி ''ஏரார்முயல்விட்டுக் காக்கைப்பின் போவதே'' என்றருளிச் செய்கிறார். இதில் உவமவுருபு இல்லையாயினும் உபமான கர்ப்பமேயாகுமிது. நிலத்திலே ஓடுவது முயல்; மரங்களின் மேலே பறந்து திரிவது காக்கை. மாம்ஸம்வேண்டியவன் கைப்படக்கூடிய முயலை

விட்டு, கைப்பட அரியதும் கைப்பட்டாலும் ஆசை தீர்க்கவல்ல தல்லாததுமான காக்கையைத் தேடித் திரிதல் எப்படி அவிவேகிக்ருத்யமோ அப்படியே எளிதாயும் ரஸவத்தரமாயுமுள்ள அர்ச்சாவதாரபோகத்தை விட்டு அரிதாயும் அஸாரமாயுமுள்ள மோக்ஷபோகத்தைப் பெற விரும்புகை—என்றாராயிற்று. இதற்கு அர்ச்சாவதார ப்ரசம்ஸையில் மட்டும் நோக்கு. .... .... .... .... (66)

**67. *காட்டகத்தோர் வல்லிக்கடிமலரின் நன்னறுவாசம்....மன்னும் வறுநிலத்து வாளாங்கு உகுத்ததுபோல்***

பெரிய திருமடலில்—எம்பெருமானுடைய அநுபவத்திற்கு உதவாத அவயவம் வியர்த்தம் என்று மன்கொதித்து அருளிச்செய்கிற விடத்தில் "கன்னவிலுங் காட்டகத்தோர் வல்லிக்கடிமலரின், நன்னறு வாசம் மற்றாரானுமெய்தாமே, மன்னும் வறுநிலத்து வாளாங்கு உகுத்ததுபோல், என்னுடைய பெண்மையும் என்னலனு மென்முலையும், மன்னுமலர்மங்கைமைந்தன், கணபுரத்துப் பொன்மலைபோல் நின்றவன்தன் பொன்னகலம் தோயாவேல், என்னிவைதான் வாளா வெனக்கே பொறையாகி முன்னிருந்து மூக்கின்று மூவாமைக் காப்பதோர், மன்னுமருந்தறிவீரில்லையே" என்றுள்ளது. ஒருவரும் புகக் கூடாத காட்டிலே சிறந்ததொரு கொடிதன்னிலே பரிமளோத்தரமான புஷ்பம் புஷ்பித்துக் கமழநின்றால் யாருக்கு என்னபயன்? அது எப்படி வீணனதோ, அப்படியே பகவத் போகத்திற்கு உரித்தாகாத என் அவுயவமும் என்கை. .... ... .... .... (67)

இயற்பாவுபமானங்கள் முற்றுப்பெற்றன.

இனித் திருவாய்மொழியுபமானங்கள்.

**68. *என்பிழை கோப்பதுபோலப் பனிவாடையீர்கின்ற***

திருவாய்மொழி முதற்பத்தில் (4) "அஞ்சிறையமடநாராய் பதிகத்தில் (7) "என்பிழை கோப்பதுபோலப் பனிவாடையீர்கின்ற" என்று பனிவாடை நலிவதற்கு ஓர் உபமானம் காட்டப்பட்டது. **என்பு இழை கோப்பதுபோல**—எலும்பிலே துளைத்து நூலிழையை நுழைத்தாற்போல் என்றபடி. அதனால் எவ்வளவு ஹிம்ஸையுண்டாகுமோ அவ்வளவு ஹிம்ஸை இப்பனிவாடையினாலுண்டாகின்றதென்கை. விரஹிகளுக்குக் குளிர்காற்று பாதகமென்க. எலும்பின் ஸ்தானத்திலே தூது விடுந் தனது சரீரமும், நூலின் ஸ்தானத்திலே குளிர்காற்றும் ஆகும். இதனால் இப்போது தனது சரீரம் எலும்பும் நரம்புமேயாம்படி மிக மெலிந்து போயிற்றென்பதும் ஸூசிதமாகும். .... (68)

**69. *தேனும் பாலும் நெய்யும் கன்னலுமமுது மொத்தே***

திருவாய்மொழி இரண்டாம் பத்தில் மூன்றும் பதிகம் முதற் பாட்டில், ஆழ்வார் எம்பெருமானும் தாமும் கலந்தபடிக்கு ஓர் உபமானம் கூறினர் "தேனும் பாலும் நெய்யுங் கன்னலுமமுது மொத்தே" என்று. தேனும் தேனும் கலந்தாற்போலவும், பாலும் பாலும் கலந்தாற்போலவும்.......அமுதும் அமுதும் கலந்தாற்போலவும்... என்று கொண்டு ஏக ஜாதீய த்ரவ்யங்கள் பரஸ்பரம் கலந்தாற்போலே என்று முன்புள்ள முதலிகளின் நிர்வாஹம். எம்பெருமானர் நிர்வஹிப்பதாவது--தேன் பால் நெய் கன்னல் அமுது ஆகிற இவற்றைச் சொன்னது மற்றுமுள்ள ரஸவத் பதார்த்தங்களனைத்தையும் சொன்னபடியாய் அவனும் நானுமான கலவிக்குள்ளே எல்லா ரஸங்களுமாம்படி கலந்தோமென்று.

**70. *ஆவிசேருயிரினுள்ளா லாதுமோர் பற்றிலாத பாவனை***

மூன்றும் பத்து நான்காம்பதிகம் (10) "யாவையும் யவருந்தானாய்" என்கிற பாட்டில் "ஆவிசேருயிரினுள்ளாலாது மோர் பற்றிலாத பாவனையதனைக்கூடில் அவனையுங் கூடலாமே" என்கிற பின்னடிகட்குப் பலவாறு பொருள் கொள்ள இடமுண்டாயினும் எம்பெருமானர் ஆதரித்தருளின் பொருள் ஒன்றே. உடலுக்குள்ளே யிருக்கிற உயிர்கட்கு அந்த உடலைச் சார்ந்த இளமை நரை திரை மூப்பு முதலிய வேறுபாடுகள் தட்டுவதில்லை யென்கிற எண்ணம் மனத்திற்படுமாயின், [இதேபோல்] எம்பெருமான் சேதநாசேதநங்களோடு கலந்திருந்தாலும் அவற்றின் விகாரம் எம்பெருமானுக்குத் தட்டா தென்பதும் மனத்திற் பதியும்—என்பதே. ஆகவே இது உபமானமாக அமைந்த வாக்கியமென்றுணர்க. .... .... .... .... (70)

**71. *விழுமியவமரர் முனிவர் விழுங்குங் கன்னல் கனியினை***

மூன்றும்பத்தில் ஆறுந்திருவாய்மொழியில் (7) "விழுமியவமரர் முனிவர் விழுங்குங் கன்னற்கனியினை" என்ற முன்றமடியில் உவமவுருபு ஒன்றுமில்லையாயினும் இது அபூதோபமையாகத் திருவுள்ளம் பற்றி யருளிச்செய்ததாம். மாங்கனி பலவின்கனி யென்னுமாபோலே கன்னற்கனி யென்று ஒரு கனி கிடையாது. கன்னலென்பது அக்காரக் கட்டி ; அதைச் செடியின் ஸ்தானத்திலேயாக்கி அதினின்று பழுத்த பழம் ஒன்று இருக்குமாகில் அது எவ்வளவு போக்யமாயிருக்குமோ அவ்வளவு போக்யன் எம்பெருமான் என்றவாறு. அக்காரக்கனி யென்று வழங்கும் திருநாமத்திலும் இத்தகைய பொருளே விவரிக்கத்தக்கது.

72. "ஆவாரார் துணையென்று அலைநீர்க் கடலுளழுந்தும் நாவாய் போல்

ஐந்தாம் பத்தில் "கையார்சக்கரப் பதிக்த்தில் (9ல்) ஆழ்வார் பிறவிக் கடலுள் நின்று துளங்குகின்ற தமக்கு அலைநீர்க் கடலுளழுந்தும் நாவாயை உவமை கூறுகின்றார். நாவாயாவது மரக்கலம் (கப்பல்). அசேதனமான மரக்கலமானது ஆவாரார்துணையென்று பேசுமோ வென்று சங்கை தோன்றும்; இதற்கு இருவகையான பரிஹார முணர்க. "மஞ்சா: க்ரோசந்தி" என்று வடநூலார் காட்டு முதாஹரணத்தின் படியே இலக்கணையால் மரக்கலத்திலுள்ளாரைப் பொருளாகக்கொள்ளு மிடத்து எளிதாகப் பொருந்தும். அன்றிக்கே, கரையிலுள்ளவர்கள் ஆவாரார் துணையென்று கதறும்படியாக ஒரு கப்பல் கடலினுள்ளே அழுந்துமாபோலே - என்றுங்கொள்ளலாம். இப்பொருளில் துணை யென்று என்றவிடத்து எச்சத்திரிபு; (துணையென்ன) என்றவாறு. ( 2)

73 "கறந்த பாலுள் நெய்யேபோல்"

எட்டாம் பத்தில் (5) "மாயக் கூத்தன் பதிக்த்தில் (10) "பிறந்த மாயா பாசுரத்தில் கறந்த பாலுள் நெய்யேபோல் இவற்றுளெங்குங் கண்டுகோள் இறந்து நின்ற பெருமாயா! உன்னை யெங்கே காண்கே னேயென்கிறார். முன்னடிகளின் கருத்தை முன்னம் தெரிந்துகொள்ள வேணும்; எம்பெருமானே! நீ பிறந்து கண்ணுக்குப் புலப்படுகிறவனா யிருக்கச் செய்தேயும் பஞ்ச பூதங்கள் முதலியவற்றில் அநுப்ரவேசித் திருந்து கண்ணுக்குப் புலப்படாமலுமிருக்கிறாயென்று முன்னடிகளிற் கூறினர். கண்ணுக்குப் புலப்படாதிருக்கும்போது அவற்றினுள்ளே யிருப்பதாக எப்படி தெரிந்துகொள்வதென்ன; அதற்கிந்தத்ருஷ்டாந்த மருளிச்செய்கிறார் "கறந்த பாலுள் நெய்யேபோல்" என்று. "க்ருத மிவ பயஸி நிகூடம்" என்று ப்ரஹ்மவிதுபநிஷத்திற் கூறியதை அடி யொற்றி யருளிச்செய்தபடி. பாலைக் கடைந்து வெண்ணெயாக்கி நெய்யாக்குகிறோம். பாலில் நெய் தென்படவில்லையென்பதனால் பாலில் நெய் இல்லையென்னப் போகாதே. அதுபோலவென்கை. இப்பாட் டில் மூன்றாமடியின் முடிவில் கண்டுகொள் என்கிற பாடம் தவறு, கண்டு கோள் என்னவேணும். கண்டுகொள்ளுகையில்லாத என்று பொருள்.

74. "நாய் கூழைவாலால் குழைக்கின்றதுபோல என்னுள்ளங்குழையும்."

ஒன்பதாம் பத்தில் (4) "மையார் கருங்கண்ணிப் பதிகத்தில் (3) "அழைக்கின்ற வடிநாயேன் நாய் கூழைவாலால்," என்று ஓர் அபூர்வத்ருஷ்டாந்தமிட்டுப் பேசுகிறார். இங்கு ஆழ்வார் கூறுவதாவது,

என்னுடைய தன்மையை நான் நன்கறியாதவனல்லேன், அறிந்துள்ளேன், நீசனேன் நிறையொன்று மிலேனான நான் உன்னைக் கிட்டினால் உனக்கு அவத்யமாகுமென்பதை அறிந்தேயிருக்கின்றேன். ஆனாலும் ருசி வெறுமனிருக்க வொட்டாமையாலே ஆர்த்தியாலே கூப்பிடா நின்றேன். உலகில் நாயானது தன் தலைவனுக்குத் தன் ஆவலைத் தெரிவிப்பது தன் வாலினாலன்றோ. அந்த வால் குட்டையானால் தெரிவிக்க அரிதாம். ஐயோ தெரிவிக்க முடியவில்லையேயென்று நோவுபட்டுக் கிடக்கும். அதுபோல என்னுள்ளமும் நோவுபட்டுக் கிடக்கின்றதென்பதாம். இங்குக் காட்டின உவமையால் இரண்டு வகையான கருத்துத் தேறும். ஆழ்வாருடைய திருவுள்ளத்திலோடுகிற கிலேசம் வாய்விட்டுத் தெரிவிக்க முடியாதது என்பதொன்று. நாய் ஸாதன மில்லாமல் கிலேசப்படுவதுபோலத் தாமும் ஒரு வகையான ஸாதனமுமின்றியே கிலேசிப்பதாகச் சொல்வது மற்றொன்று. .... (74)

## 75 "நீலவரை இரண்டு பிறை கவ்வி நிமிர்ந்ததொப்ப"

திருவாய்மொழி பத்தாம்பத்து—பத்தாம் பதிகம் (7) "கோல மலர்ப் பாவைக்கன்பாகிய பாசுரத்தில் "நீலவரை இரண்டு பிறை கவ்வி நிமிர்ந்ததொப்பக் கோலவராகமொன்றாய்" என்றுள்ளது. 'இரண்டு பிறை கவ்வி நீலவரை நிமிர்ந்ததொப்ப' என்று அந்வயிப்பது. ஓர் அஞ்சன மலையானது இரண்டு பிறைகளைக் கவ்விக் கொண்டு நிமிர்ந்தாற்போலே கோலவராகமாகி நிலத்தை எயிற்றிடையிலே கொண்ட பெருமானே என்றபடி. நீலமணி பர்வதத்தின் ஸ்தானத்திலே கோல வராகமும் இரண்டு பிறைகளின் ஸ்தானத்திலே இரு கோரப் பற்களும் கொள்க. கோரப் பற்களிலே ஏந்திக்கொண்ட நிலத்திற்கு ஓர் உபமானம் சொல்லப்படாதது ஏனெனில் பூமி தனிப்பட்ட ஓர் வஸ்துவாகவே தெரியாமலிருந்தமைதான் இங்குத் தெரிவிக்கப்படுகிறது, "பிறையில் மறுவோபாதியாய்த்து திருவெயிற்றில் கிடந்த பூமி" என்ற ஈட்டு ஸ்ரீஸூக்தியின் சுவையறிக. பிரளயங்கொண்ட பூமியை அண்ட பித்தியிலே புக்கு எயிற்றிலே கொண்டெடுத்தாப்போலே ஸம்ஸார ப்ரளயங்கொண்ட என்னையெடுத்தவனே! என்பது இவ்விடத்து உள்ளுறை பொருள், ... ... .... .... (75)

(தொடரும்)